

# "கமலுக்கு திருஷ்டி சுற்றிப் போடுங்கள்" என்றார் எம்.ஜி.ஆர்.

ஆறு மணிக்கு என்று அறிவிக்கப்பட்ட எந்த விழாதான் இதுவரையில் 'டாண்' என்று சரியான நேரத்தில் துவங்கியிருக்கிறது? அப்படி இருக்க, அகில இந்திய கமலஹாசன் ரசிகர்கள் நற்பணித் தலைமை மன்றத்தின் விழா மட்டும் குறித்த நேரத்தில் துவங்கி விட்டால் திருஷ்டி பட்டுவிடுமே! அதற்காகவே ஆறு நாற்பதுக்கு விழாவுக்கு 'கிளாப்' அடித்துத் துவக்கினார்கள்.

தேனாம்பேட்டை காமராஜர் திடல் கணிசமாக நிறைந்திருந்தது கமல் ரசிகர்களால். தமிழ்த் தாய் வாழ்த்து, முதல்வர் உரை, கமலின் நன்றியுரை — இம்மூன்றையும் போனால் போகிறது என்று விட்டு விட்டு மற்றவர்கள் பேசும்போதெல்லாம் கைதட்டலும் விசிலுமாகப் பின்னணி இசை வழங்கிக் கொண்டே இருந்தார்கள் கமல் ரசிகர்கள்.

ஏறக்குறைய ஒரு டஜன் பேச்சாளர்கள் இருந்தும், விழா அநாவசியமாக நீண்டு கொண்டே போகவில்லை என்பது பாராட்டுக்குரிய விஷயமாகும்.

சுருக்கமாகப் பேசியவர்களுக்காகப் பரிசு ஏதாவது தருவதாயிருந்தால் அதை டைரக்டர் கே. விஸ்வநாத்துக்குத்தான் கொடுக்க வேண்டும்! 'ஶதமானம் பவதி....' என்று தொடங்கும் சம்ஸ்கிருத வாழ்த்தை இரண்டு நிமிடங்களுக்குள் கூறி முடித்து, இடத்தைக் காலி செய்தார் அவர்!

பாரதிராஜா என்றைக்குமே உணர்ச்சி வசப்படக் கூடியவர். இந்த விழாவிலும் பட்டார். 'சலங்கை ஒலி' படம் பார்த்தாராம். கமலின் நடிப்பைக் கண்டு அசந்து போனாராம். கமலின் முதுகில் (பாராட்டாக) அறைய வேண்டும் போல உணர்ச்சி பொங்கியதாம். சொன்னார், ''என் காலமெல்லாம் முடிந்து நான் மறைந்த பிறகும் கமல் திரைப்படவுலகில் கோலோச்சிக் கொண்டிருக்க வேண்டும்'' என்று வாழ்த்தினார். கமல் வடக்கேயும் வெற்றிக் கொடி நாட்டி வருகிறாரல்லவா? ''பிற்காலத்தில், 'கமல் வடநாட்டைச் சேர்ந்தவர்தான்' என்று வடநாட்டினர் உரிமை கோரும் விதத்தில்

---

லடாக் ஞாபகம் இருக்கிறதல்லவா? இருபது வருடங்களுக்கு முன்னால் சீனப் படையெடுப்பின்போது இந்திய தினசரிப் பத்திரிகைகளில் தினந்தோறும் அடிபட்ட அதே லடாக்தான்...! பனி படர்ந்த அந்தப் பிரதேசத்தில் உள்ள மிகப் பெரிய பௌத்த மடாலயத்தின் படத்தைத்தான் இரண்டாவது அட்டையில் காண்கிறீர்கள். லே என்னும் ஊரிலிருந்து முப்பது கிலோமீட்டர் தொலைவில் இந்த மாபெரும் மடாலயம் டிக்ஸே என்ற கிராமத்தில் அமைந்திருக்கிறது. சலசலத்து ஓடும் சிந்து நதி இந்தச் சிற்றூரை இயற்கை வளம் கொழிக்கச் செய்திருக்கிறது. டிக்ஸே கிராமத்தின் இன்னொரு பெயர் என்ன தெரியுமா? 'லாமாக்களின் கிராமம்'!

வண்ணப்படம்: வித்யாஸ்ரதா

'கமலஹாசன்' என்று பெயர் வைத்துக்கொண்டிருக்கிறாரே; ஏதோ 'பாண்டியன்' என்பது போலத் தமிழ்ப் பெயராக இருந்தால் அவர் தமிழுக்குச் சொந்தமானவர் என்று சிரமமின்றி நிரூபிக்க இயலுமே!'' என்று வருத்தம் கலந்த பெருமூச்சு விட்டார் பா. ராஜா.

எழுத்தாளர் — பத்திரிகையாளர் மணியன், அன்று மேடையில் ஒரு புது அவதாரம் எடுத்தார் — கவிஞராக. ''முதல்வர் முன்னிலையில் இன்று நான் கவிஞனாக அரங்கேறுகிறேன்!'' என்று சொல்லிக் கமல் பற்றித் தாம் எழுதிக் கொண்டு வந்திருந்த புதுக் கவிதையை கவியரங்கப் பாணியில் வாசித்தார். மணியான கவிதை என்று சொல்வதற்கில்லை என்றாலும் ரம்ப வகையல்ல என்று நிச்சயமாகக் கூறலாம்.

சூப்பர்-ஸ்டார் அமிதாப் இந்த விழாவில் பங்கேற்பதற்காகவென்றே பம்பாயிலிருந்து வந்திருந்தார். கமலுக்குப் புகழாரம் சூட்டத் தொடங்குவதற்கு முன்பாக அமிதாப் ''மதிப்புக்குரிய எம். ஜி. ஆர். அவர்களே, கமல்ஹாசன் அவர்களே, தமிழ் ரசிகர்களே...வணக்கம்!'' என்று கணீரென்று தமிழில் முழங்கி, கைதட்டலைச் சுருட்டிக் கொண்டார். ''எனக்குப் பரிசு கிடைக்கும் என்று எதிர்பார்த்தேன். கமலுக்குக் கிடைத்திருக்கிறது. மகிழ்ச்சிதான்... நான் உடல் நலமின்றி மருத்துவ மனையில் சிகிச்சை பெற்று வந்தபோது லட்சக் கணக்கான ரசிகப் பெருமக்கள் என்மீது அன்பு காட்டி எனக்காகப் பிரார்த்தனை செய்தார்களே, அதையே நான் பெற்ற பெரும் பரிசாகக் கருதுகிறேன்'' என்று மனம் திறந்து பேசினார் அமிதாப்.

விழா நிகழ்ச்சிகளை — கமலுக்கு வழங்கப்படும் பாராட்டுரைகளை — மேடையிலிருந்தபடியே கவனித்துப் பூரித்துப் போய்க் கொண்டிருந்தார் டைரக்டர் கே.பாலசந்தர். இருக்காதா பின்னே...? தமது உரையின் போது, ''கமலுக்கு இது போல இன்னும் எத்தனை பாராட்டு விழாக்கள் நடந்தாலும் அத்தனையிலும் நான் கலந்து கொள்வேன்!'' என்றவர், கமலின் தந்தை 'you are more than a father to him' என்று பெருந்தன்மையுடன் கடிதம் எழுதியதை நினைவுகூர்ந்தார்.

இடையில் ஸ்ரீதேவி மேடை ஏறியபோது விசில் சத்தம் காதைப் பிளந்தது. எண்ணி இருபது வார்த்தைகள் பேசிவிட்டு, வேறு ஏதோ முக்கிய அலுவல் இருப்பதாக வெளியேறினார் அவர். அன்றைய நிகழ்ச்சியில் பேசிய ஒரே பெண்மணி அவர்தான். நிகழ்ச்சி நிரலில் குறிப்பிட்டிருந்த ஜெயலலிதாவும் மனோரமாவும் ஏனோ வரவில்லை.

முதல்வரின் உரையின்போது நிசப்தம் நிலவியது. ''கமல் ஆங்கிலப் படங்களில் நடித்து ஆஸ்கார் பரிசு பெற வேண்டும் என்று இங்கே சிலர் வாழ்த்தினார்கள். நான் மட்டும் சினிமாத் துறையில் இப்போது இருந்திருந்தால் கமலை வைத்து நானே ஆங்கிலப் படம் எடுத்திருப்பேன்!'' என்று சொன்னார். கைதட்டல் கூரையைப் பிளந்தது.

பம்பாயிலிருந்து பறந்து வந்த அமிதாப்பின் பரந்த உள்ளத்தைப் பாராட்ட மறக்கவில்லை முதல்வர். அமிதாப்பின் நடிப்புத் திறமையை மெச்சிப் பேசுகையில் 'லாவாரிஸ்' படத்தில் அவர் பெண் வேடம் தரித்து ஆடிப் பாடிய நேர்த்தியைக் குறிப்பிட்டு மகிழ்ந்து போனார். (முதல்வருக்கு டி.வி.யில் 'சித்ரஹார்' நிகழ்ச்சியைப் பார்க்கும் அளவுக்கு ஓய்வு இருந்திருக்கிறது என்று தெரிகிறது!)

ஸ்ரீதேவிக்குச் சிறந்த நடிகைக்கான பரிசு கிடைக்காததைப் பற்றி வருந்தினார் எம். ஜி. ஆர். ''அவர்கள் கொடுக்காவில்லையென்றால் தமிழக அரசு கொடுக்கும்!'' என்று ஒரு மகிழ்ச்சிக் குண்டை எடுத்து வீசினார்!

கமல் தனக்குப் பரிசாகக் கிடைத்த பத்தாயிரம் ரூபாயையும் அப்படியே தூக்கி முதல்வரின் சத்துணவு நிதிக்கென கொடுத்து விட்டார் இந்த விழாவின்போது. இதைச் சொல்லி விட்டு, ''சிலர் இருக்கிறார்கள்... நாம் சம்பாதிப்பது நம்மிடமே இருக்கட்டும்; பிற்காலத்தில் பயன்படும் என்று நினைப்பார்கள்... கமல் அப்படிப்பட்டவர் அல்ல..'' என்று கமலைப் புகழ்கிற சாக்கில் யாரையோ சுருக்கென்று குத்தினார் எம். ஜி. ஆர்.

எல்லாவற்றையும் விட, ''உங்களைச் சுற்றி யார் யார் இருக்கிறார்கள் என்று அவ்வப்போது கண்காணித்து வாருங்கள்'' என்று மிக முக்கியமான 'அட்வைஸ்' ஒன்றையும் அளித்து, ''வீட்டுக்குப் போய் திருஷ்டி சுற்றிப் போடச் சொல்லுங்கள்!'' என்று பாசத்துடன் கூறி, கமலை வாழ்த்தினார் முதல்வர்.

கமல் தமது நன்றியுரையில், ''இதையெல்லாம் என் தாய் இருந்து பார்க்கவில்லையே என்ற ஏக்கம் எனக்கு இருக்கிறது'' என்று கூறியது அந்தக் கலைஞரின் உள்ளத்தில் குடி கொண்டிருக்கும் ஒரு குழந்தையைக் கண் முன்னே கொண்டு வந்து நிறுத்தியது.

ஒவ்வொரு பிரிவினருக்கும் நன்றி சொல்லிக்கொண்டே வந்த கமல், மறக்காமல் பத்திரிகையாளர்களையும் குறிப்பிட்டது அவரது வெற்றியின் ரகசியத்தை வெளிச்சம் போட்டுக் காட்டியது.

—எஸ். வி. ஆர்.

ஜாதி அடிப்படையில் உள்ள தெருப் பெயர்களை தமிழக அரசு நீக்கி வருகிறது. ஆனால் ஜாதியைக் குறிக்கும் வகையில் பல ஊர்கள் உள்ளன. உதாரணத்திற்கு நெல்லை மாவட்டத்தை எடுத்துக்கொள்ளுங்கள். தேவர் குளம், நாடார் குளம், ஆச்சாரி பள்ளம், கிறிஸ்தியா நகரம், துலுக்கப்பட்டி, ரெட்டியார் பட்டி, நாயக்கன்பட்டி. -எஸ். முகம்மது யூசுப்



# கல்கி

## 42ம் ஆண்டில்...



வாசகர்களின்
இரட்டிப்பு
மகிழ்ச்சிக்கு

# சுஜாதா
# சிவசங்கரி

எழுதும்
தொடர்கதைகள்
ஆரம்பம்



ஆகஸ்ட் 7
ஆண்டு
மலர்

# பாண்டியில் (ஜனநாயக) படுகொலை

[ஜனாதிபதி ஆட்சி கொண்டு வரப்பட்டது பற்றி பாண்டிச்சேரி மக்களிடம் கருத்து கேட்டபோது]



**ராணி (மில்லில் வேலை செய்பவர்)**

ஏதாவது பிரச்சினை என்றால் முன்பெல்லாம் எம். எல். ஏ.க்களை சந்தித்துப் பேச முடியும். இப்போது நாங்கள் யாரிடம் போய்க் குறைகளைச்சொல்வது? அநியாயமாக ஆட்சியைக் கலைத்து விட்டார்களே.



**புலவர் கார்முகில் (சலவைக் கடை)**

தி. மு. க.வுக்கு பலத்தைக் காண்பிக்க ஒரு வாய்ப்புக் கொடுக்காத கவர்னர் நேர்மையாகச் செயல்படாமல் உண்மையான காங்கிரஸ்காரராகவே செயல்பட்டிருக்கிறார்.



**ஆறுமுகம் (கண்டிராக்டர்)**

ஊழல் ஊழல்னு சொல்றாங்க காங்கிரஸ்காரங்க. அந்த ஊழல் அரசாங்கத்திலே தானே இவர்கள் இத்தனை நாள் மந்திரியாக இருந்தார்கள்? இவர்கள் மட்டும் ஊழல் செய்திருக்க மாட்டார்கள் என்பது என்ன நிச்சயம்?



**சங்கீதா அமர்நாத் (ஆசிரியை)**

ஹரியானாவில் காங்கிரஸுக்கு வாய்ப்புக் கொடுத்து மெஜாரிட்டியைக் காண்பிக்க ஒரு மாதம் அவகாசம் கொடுத்த இந்திரா அரசு, பாண்டிச்சேரி தி.மு.க. வுக்கு அந்தவாய்ப்பைக்கொடுக்காமல் போனதேன்? நடந்திருப்பது நிச்சயமாக ஜனநாயகப் படுகொலைதான்!



**ஆதிநாராயணன் (மில் தொழிலாளர்)**

வேறு ஏதோ உள் நோக்கோடுதான் இ.காங்கிரஸ் கூட்டணியை முறித்திருக்கிறது. பாண்டிச்சேரி சூழ்நிலை காரணம் அல்ல.



### பதவியை இழந்த ராமச்சந்திரன்

1969ல் இருந்து மந்திரியாக இருந்து வருகிறார் ராமச்சந்திரன். (இடையில் இருந்த ஜனாதிபதி ஆட்சி காலத்தைத் தவிர) ஐம்பது வயதைக் கடந்துவிட்ட இவரது சொந்த ஊர் பாண்டியில் இருந்து 10 கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள மடுக்கரை. சென்னை லயோலாவில் இன்டர் வரை படித்துவிட்டு ஊருக்கும் போய் விவசாயம் பார்த்தவர். பாண்டியில் கூட்டுறவு இயக்கம் வளர இவரது சேவையும் ஒரு காரணம். எதையுமே மனம் திறந்து பேசும் ராமச்சந்திரனுக்கு இரண்டு பெண்கள். மருமகன்கள் விவசாயம் பார்க்கிறார்கள். படிக்கும் காலத்திலிருந்தே தி. க., தி.மு.க. என்று பற்றுக் கொண்டிருந்தவர். 1974ல் அ. தி. மு. க. சார்பில் மண்ணாடிப் பேட்டை என்ற தொகுதியில் நின்று ஜெயித்தார். அதே தொகுதியில் 1977, 1980 தேர்தல்களிலும் வென்றவர். தொகுதியில் ஒவ்வொருவரையும் பர்சனலாக அறிந்தவர். 1978ல் பாண்டியைத் தமிழ்நாட்டுடன் இணைக்க வேண்டும் என்று எம். ஜி. ஆர். கூறியபோது இணைப்பு கூடாது என்ற போராட்டத்தில் குதித்தவர். பின்பு அ.தி.மு.க.வில் இருந்து விலகினார். கல்லூரியில் படிக்கும்போது பாட்மின்டன் விளையாடுவாராம். 'இப்போது எங்கே நேரம் இருக்கிறது' என்கிறார். இவரது இஷ்ட தெய்வம் திருப்பதி ஏழுமலையான். இவர்கள் வீட்டில் வெஜிடேரியனாக இருந்தாலும் இவர் நான்-வெஜிடேரியன் உணவு வகைகளையும் ரசித்துச் சாப்பிடுவார்.



**எஸ். சாமிநாதன் (ரிக்‌ஷா தொழிலாளி)**

ஜனங்களுக்கு இப்போதான் சார் நிம்மதி. ஊழல் அரசு ஒழிந்தது என்று திருப்தியோடு இருக்கிறார்கள்.

## கவர்னர் கே. எம். சாண்டி

கேரளத்தைச் சேர்ந்த கோட்டயம் அருகில் உள்ள பாலே என்ற கிராமத்தில் பிறந்தார் சாண்டி. இப்போது வயது 61. வாழ்க்கையில் பல ஏற்ற இறக்கங்களைக் கண்டவர். பி.ஏ. (ஹானர்ஸ்) வரை படித்தவர். படிக்கும் காலத்தில் இருந்தே காங்கிரஸில் இருப்பவர். கிராமத் தலைவரில் தொடங்கி, மாநிலத் தலைவர் அளவுக்கு உயர்ந்தவர். சாண்டிக்கு 18 வயதிலேயே கல்யாணம் நடந்துவிட்டது. எட்டுப் பையன்கள், இரண்டு பெண்கள். (ஒரு பெண்ணுக்கு மனநிலை சரியில்லை என்கிறார் வருத்தத்தோடு). 1978ல் இ. காங்கிரஸ் கேரளாவில் இருந்த இடம் தெரியாமல் இருந்த போது கட்சித் தலைவராக்கப்பட்டார். பிறகு கிராமம் கிராமமாகச் சென்று கட்சியை வளர்த்தார். இன்று காங்கிரஸ் கூட்டணி கேரளாவில் ஆட்சியில் இருக்கிறது என்றால் அதற்கு சாண்டியும் ஒரு காரணம்.

தமது 25வது வயதில் அரசியல் காரணத்தால் ஜெயிலில் ஒரு வருடம் இருந்திருக்கிறார். "இப்போது கவர்னர் மாளிகையில் இருப்பதற்கும் அப்போது ஜெயிலில் இருந்ததற்கும் அவ்வளவாக வேறுபாடுகள் இல்லை என்று அடிக்கடி நான் நினைத்துக் கொள்வதுண்டு" என்கிறார்.

இவருக்கு டயாபடீஸ். இன்சுலினை இவரே தினமும் போட்டுக் கொள்கிறார். இவரது உடல்நிலையைப் பார்த்து 'கொஞ்சம் ஓய்வு எடுத்துக்கொள்ளுங்கள்' என்று இந்திரா காந்தி கூறி கவர்னர் பதவியை அளித்தாராம்.

("அரசியல் கூடாது" என்ற நிபந்தனையுடன் பாண்டி கவர்னருடன் நடந்த உரையாடலின் போது அவரைப் பற்றித் தெரிந்துகொண்டவை.)





### குப்புசாமி (பெட்டிக்கடை)

இந்தக் கலைப்பு நாடகத்திற்குப் பின் எம்.ஜி.ஆர். இருக்கிறார். அவர் கட்சி இங்கே ஒரு இடம் வாங்க முடியாது. இந்திரா காந்தி இந்த மாதிரிச் செயலைச் செய்ததற்கு மக்கள் பாடம் புகட்டப் போகிறார்கள்.



### எம். அண்ணாமலை (முடி வெட்டும் தொழிலாளி)

இதற்கு முன்னர் பல தடவை ஜனாதிபதி ஆட்சி பாண்டியில் நடந்திருக்கிறது. ஆனால் அப்போதெல்லாம் அது அவசியமானதாகவும் தவிர்க்க முடியாததாகவும் இருந்தது. ஆனால் இந்த முறை கவர்னர் நடந்து கொண்ட விதம் இந்தியாவில் ஜனநாயகம் நிலவுகிறதா என்ற கேள்வியையே எழுப்புகிறது.



### அன்னமதி (வீட்டுத் தலைவி)

விசாரணைக் கமிஷன் வைத்து 'தி.மு.க. ஊழல் செய்தார்கள் அதனால் தான் கலைத்தோம்' என்று சொல்லப் போகிறார்களாம். அதே அரசில் மந்திரிகளாக இருந்த காங்கிரஸ்காரர்கள் மீதும் விசாரணைக் கமிஷன் வருமா?



### மேரி ராணி (வீட்டுத் தலைவி)

தி. மு. க. மந்திரிகள் ஊழல் செய்வதை எவ்வளவு நாள்தான் பார்த்துக் கொண்டு சும்மா இருக்க முடியும்? கூட்டணியிலிருந்து காங்கிரஸ் வெளியே வந்தது சரிதான். ஆனால் தி. மு. க. வுக்கு அரசு அமைக்க வாய்ப்புக் கொடுக்கவில்லை என்பதை எண்ணும்போதுதான் வருத்தமாக இருக்கிறது.

—நமது நிருபர்

படங்கள்: ஸ்பைடர்மேன்

### பாண்டிச்சேரி

பாண்டிச்சேரி தவிர தமிழ் நாட்டில் தஞ்சாவூர் அருகில் உள்ள காரைக்கால், கேரளாவில் தலைச்சேரி அருகிலுள்ள மாஹி, ஆந்திராவில் காகிநாடா அருகில் உள்ள ஏனாம் ஆகியவை இந்த யூனியன் பிரதேசத்தில் உள்ளடக்கம். கிட்டத்தட்ட 300 கி. மீ. பரப்புள்ள பாண்டியின் ஜனத்தொகை ஆறு லட்சம். 1954ல் இந்தியாவுடன் இணைந்தாலும் 1-7-63ல்தான் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசு பதவிக்கு வந்தது. கிட்டத்தட்ட இரண்டு கோடி வருமானத்தில் 75 சதவீதம் மதுபானம் மூலம் கிடைப்பதுதான். யூனியன் பிரதேசமாக இருப்பதால் நிறைய மத்திய உதவி கிடைக்கிறது. தனி நபர் வருமானம் ஒப்புநோக்குகையில் அதிகம். தொழில்: விவசாயம், நெசவாலைகள். மிதக்கும் மக்கள் கூட்டம். (Floating Population) பாண்டியில் அதிகம்.

# "முயலுக்குக் கால்கள் மூன்று..."

சமீபத்தில் ஒரு நாள் ஒரு பெட்டிக் கடையில் பழம் வாங்குவதற்காக நின்று கொண்டிருந்தேன். குடி போதையில் அருகில் வந்து நின்ற ஒரு தினக் கூலித் தொழிலாளி கடையில் பத்து லாட்டரி சீட்டுக்கள் வாங்கினார். நான் சற்றுத் தயங்கியவாறு அவரிடம், "இன்னிக்கு எவ்வளவு கிடைத்தது?" என்றேன். "இருவத்து அஞ்சு ருவா சாமி. அஞ்சு ரூவாய்க்கு ஊத்திக்கிட்டேன். பத்து ரூபாய் வீட்ல பொம்பளை கிட்டக் கொடுத்துடுவேன். இன்னிக்குப் பொழுது போக்க. நாளைக்குப் பொழச்சிருந்தாப் பார்க்கலாம்" என்றார்!

—விஜி






போலீஸார் என்றால் சட்டம் ஒழுங்குக்கு மட்டும்தானா... சமூக சேவை செய்யக் கூடாதா? செய்ய முடியும் என நிரூபித்துள்ளனர் கன்யாகுமரி மாவட்டத்தில் நாகர்கோவில் டிவிஷனைச் சேர்ந்த போலீஸார். ஆம்.... மண்டைக்காடு— (மதக் கலவரத்துக்காகக் கடந்த வருடம் பரபரப்பாகப் பேசப்பட்ட ஊர்) புதூர் —கொளச்சல் கால்வாயை மண் எடுத்து ஆழப்படுத்தும் பணியில் போலீஸார் ஈடுபடுத்தப்பட்டுக் காரியத்தைச் செவ்வனே நிறைவேற்றி வருகின்றனர். இதன் மூலம் போலீஸார் என்றாலே பீதியடைந்திருந்த மக்களிடையே பெரும் நல்ல பெயரைச் சம்பாதித்துள்ளனர்.

—ராஜி ராதா

முயலுக்குக்
கால்கள்மூன்று
என்றான் ஏழை!
ஐந்து என்றான்
பணக்காரன்.
'நாலு' என்று
அறிந்தவன் சொல்வதற்குள்
முயல் கறி சாப்பிட்ட
அரசியல்வாதி
"முயலைப் படைத்தவன்
முட்டாள்" என்றான்!
முயலை மறந்து
ஏழையும் பணக்காரனும்
அறிந்தவனோடு கை தட்டினார்கள்!

—எல்.ஜி. சங்கர்





"அமெரிக்க மருமகனை வச்சுக்கிட்டு என்றால சமாளிக்க முடியலே."

"ஏன் மாமி?"

"சௌந்தரிய லஹரி, சுப்ரபாதம் இதைப் பற்றி யெல்லாம் கேட்டால் யாருக்குத் தெரிகிறது?"

—பி. ஆர்.கே.

# வியர்க்குருவினின்று நிவாரணம் பெற டால்கம் பவுடர் போதாது, நைஸில் வேண்டும்.

## நைஸில் உபயோகியுங்கள்

### வியர்க்குருவினின்று விரைவில் நிவாரணம் பெறுங்கள்.






HTB-GLL/8808

நைஸில், மருந்துக்கலவையுள்ள பவுடர் ஆகும்.
வியர்க்குருவின் எந்தவிதத் தொல்லையிலிருந்தும்
உடனடியாக நிவாரணம் அளிப்பதற்கென்றே
விசேஷமுறையில் தயாரிக்கப்பட்டதாகும். டால்கம்
பவுடர்களைப் போலன்றி, பிரச்சினை மோசமாவ
தினின்றும், பரவுவதினின்றும் எதிர்த்துக் காக்கிறது இது.

1. அளவுக்கு மீறிய வியர்வையைத் தடுக்கிறது.
2. வியர்வையை உறிஞ்சுகிறது. 3. துர்நாற்றம் ஏற்படுத்தும் கிருமிகளை அழிக்கிறது. 4. சருமத்திற்கு இதமளிக்கிறது.

உடல் நலத்தின் உறைவிடம்

**க்ளாக்ஸோ**

# ஐயம் கொள்ள வேண்டாம்

ஒவ்வொரு காரியத்தையும்செய்யும்போது 'இந்தக் காரியம் செய்யலாமா, வேண்டாமா? இதனால் நமக்கு என்ன பயன் கிடைக்கும்? எந்த அளவு கிடைக்கும்' என்று சந்தேகித்து, ஆலோசனை செய்து, பிறகு முடிவுசெய்து பணிகளைத் தொடங்குவது மனித இயல்பு. எந்த ஒரு காரியம் செய்வதாக இருந்தாலும் முதலில் சந்தேகம் வரவேண்டும். பிறகு சந்தேகம் நிவிருத்தியாகி, தைரியத்துடனும், நம்பிக்கையுடனும் காரியத்தைத் தொடங்க வேண்டும். அவ்வாறு இல்லாமல், ஒரு சிலர் எப்பொழுதும் எந்தக் காரியத்தைச் செய்வதானாலும், சந்தேகப்பட்டுக் கொண்டே காலத்தைக் கழித்து விடுவார்கள். இப்படி எப்போதும் சந்தேகத்துடனே இருக்கக் கூடாது. கடவுள் இருக்கிறாரா இல்லையா என்பதில் சந்தேகம். மறு பிறவி உண்டா இல்லையா என்பதில் சந்தேகம். ஸ்வர்க்கம், கைலாசம் இவைகளில் சந்தேகம். நம்முடைய சுக துக்கங்களுக்குக் காரணமான புண்ணிய பாவங்கள் இருக்கின்றனவா என்பதில் சந்தேகம். இப்படிப் பலவிதமான ஐயங்கள் மனித வாழ்விலே எழுகின்றன. இந்தச் சந்தேகங்களையெல்லாம் நமது வேத சாஸ்திர புராணங்களும், இதிகாச இலக்கியங்களும் ஆராய்ந்து பார்த்து இவை அனைத்தும் உண்டு என்பதைத் தெளிவாக்குகின்றன.

ஒரு சமயம் நம்முடைய இந்து மதத்தை வளர்க்கும் நோக்கத்துடன், குமாரில பட்டர் என்ற பெரியவர் அவர் காலத்தில் பிரபலமாய் இருந்து வந்த பௌத்த சமயத்திற்கு மாறிச் சென்று விஷயங்களையெல்லாம் நன்கு தெரிந்து கொண்டு மீண்டும் இந்து மதத்துக்கு வந்து, பௌத்த மதத்தைக் கண்டித்துக் கொண்டிருந்தார். சில பௌத்தர்கள் இவரைத் தண்டிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் நண்பர்கள் போல் நடித்து, இவரை அழைத்துக் கொண்டு ஒரு மலை உச்சியை அடைந்தார்கள். அங்கே இவரைத் தூஷித்து, உருட்டி விட்டார்கள். அப்பொழுது குமாரில பட்டர் ''நான் வேதத்தை ப்ரமாணமாக நம்புவது உண்மையானால், இந்து மதத்தைக் காக்க நான் பாடுபடுவது உண்மையானால், எனக்குத் தீங்கு எதுவும் நேரக் கூடாது'' என்று பிரார்த்தித்தார். மலையிலிருந்து உருண்டவர் காலில் சிறு காயத்துடன் உயிர் தப்பினார். அப்போது ஒரு அசரீரி எழுந்தது. ''குமாரில பட்டரே, நீவிர் இரண்டு இடத்தில் சந்தேகத்துடன், 'ஆனால்' என்ற சொல்லை உபயோகித்ததனால் தங்கள் உடம்பில் சிறு காயம் ஏற்பட்டிருக்கிறது; 'எனக்கு வேதமே ப்ரமாணம், நான் இந்து மதத்தைக் காப்பாற்றுகிறேன்' என்று உறுதியோடு சொல்லியிருந்தால் இந்தச் சிறு காயமும் ஏற்பட்டிருக்காது'' என்று கூறிற்று. ஆகவே நாம் நல்ல காரியங்களைச் சந்தேகத்தை அகற்றி, நம்பிக்கையுடன் செய்ய வேண்டும்.

அப்பர் பெருமானுக்கும், மாணிக்கவாசக ஸ்வாமிகளுக்கும் பலவித சோதனைகள் ஏற்பட்டன. கல்லில் கட்டிக் கடலில் போட்டார்கள். கொதி மணலில் நிற்க வைத்துத் துன்புறுத்தினார்கள். அப்படிப்பட்ட நிலையிலும் அவர்கள், ''ஆண்டவன் இருந்தால் என்னைக் காப்பாற்றட்டும்'' என்று சந்தேகத்துடன் சொல்லாமல், ''நற்றுணையாவது நமச்சிவாயவே'' என்று தீர்மானத்துடன் பக்தியாக இருந்தார்கள். அதனால் கடலில் கல் மிதந்தது; கொதி மணலில் வெள்ளம் பாய்ந்தது.

கோவிலுக்குச் செல்கிறோம். அங்கு இறைவனிடம் ''எனக்கு இந்தக் காரியம் கைகூடினால் உனக்கு இந்தப் பிரார்த்தனை நிறைவேற்றுகிறேன்'' என்று வேண்டிக் கொள்கிறோம். இதைச் செய்து கொடுத்தால் இந்தப் பொருளைத் தருகிறேன் என்று வேண்டுவது ஆண்டவனிடத்திலேயே சந்தேகத்தை உண்டு பண்ணுகிறது. இறைவனிடத்தில் நாம் சந்தேகம் கொள்ளாமல், திட நம்பிக்கையுடன் பக்தி செய்ய வேண்டும்.

மனிதன் சந்திர மண்டலத்தை எட்டிப் பிடித்துள்ள இந்நாளில் சாமியாவது ஒன்றாவது என்று சிலர் கேட்கிறார்கள். ஆனால் சந்திரனில் உலவி வந்தவர்களோ முன்னிலும் அதிகமான இறையுணர்வுடன் விளங்குகிறார்கள். அவர்களில் ஒருவர் ஆன்மீகத் தொண்டாற்ற பாதிரியாகவே மாறிவிட்டார்.

பகவான் ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா கீதையில் ''ஸம்சயாத்மா விநஸ்யதி'' என்று அருளியிருக்கிறார். மனிதன் எப்போதும் சந்தேகத்துடனே வாழ்ந்து கொண்டிருந்தால் அது நிலையான வாழ்வு அல்ல என்பது இதன் பொருள்.

எனவே, எந்த ஒரு காரியத்தைச் செய்வதிலும் ஐயப்பாடு கொண்டே இராமல், தைரியத்துடனும், நம்பிக்கையுடனும் உறுதியுடனும் செயல்படுவோமாக!

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
பீடாதிபதி ஜயேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்





# நெல்லிக்குப்பம் சர்க்கரை ஆலை மூடப்படுமா?

[தென்னிந்தியாவிலேயே முதலாவதாக ஏற்படுத்தப்பட்ட தொழிற்சாலை நெல்லிக்குப்பம் சர்க்கரைதொழிற்சாலைதான். இந்தத் தொழிற்சாலையின் வயது 138. பொருளாதார ரீதியாகக்கடந்த சில வருடங்களாகச் சரியாக இயங்காததால் மூடப்போகிறோம் என்று அரசுக்கு அறிவித்து இருக்கிறார்கள் நிர்வாகத்தினர். மூடினால் கிட்டத்தட்ட 1800 தொழிலாளர்கள் பாதிக்கப்படுவார்கள். ஆலைக்குக் கரும்பு கொடுக்கும் 17000 விவசாயிகளும் பாதிக்கப்படுவார்கள். இது சம்பந்தமாக நிர்வாகத்தினரையும், தொழிற்சாலையில் உள்ள ஒரே யூனியனான சி.ஐ.டி.யு. யூனியனின் தலைவர் திரு.சிந்தனையும் விசாரித்தபோது:

## மூடவேண்டிய நிலையில் இருக்கிறோம்

''இந்த நெல்லிக்குப்பத்தில் உள்ள பாரி கம்பெனியின் சர்க்கரை மற்றும் எரிசாராய தொழிற்சாலைகளைத் தொடர்ந்து நடத்தியதால் பொருளாதார ரீதியாகத் துளிக்கூட லாபமில்லை'' என்கிறார் ஈ.ஐ. பாரி கம்பெனியின் துணைத்தலைவர் திரு. பார்கவா அவர்கள். நெல்லிக் குப்பத்தில் உள்ள பாரி தொழிற்சாலைகளை மூட நிர்வாகம் முடிவெடுத்தது ஏன் என்பதற்குக் கீழ்க்கண்ட காரணங்களைச் சொன்னார் அவர்.

- இத்தொழிற்சாலைகள் 1978–லிருந்து தொடர்ந்து நஷ்டத்தில் இயங்கி வருகின்றன. 1982 வரை மொத்த நஷ்டம் 14 கோடியே .77 லட்சம்.
- தேவைக்கு அதிகமாகத் தொழிலாளர்கள் இருக்கிறார்கள்.
- மற்ற சர்க்கரைத் தொழிற்சாலைகளை விட அதிக சம்பளம் தருகிறோம்.

சடையாக உள்ள இரண்டு காரணங்களால் தான் உற்பத்திச் செலவு அதிகரித்து விடுகிறது. மற்றொன்று: கரும்புக்குக் கொடுக்கும் விலை. மாநில அரசு விவசாயிகளைத் திருப்தி செய்வதற்கென்று அந்த விலைகளை உயர்த்திக் கொண்டே போகிறது. மற்ற சர்க்கரைத் தொழிற்சாலைகள் குறைந்த ஆட்களை வைத்துக் கொண்டு சம்பளமும் குறைவாகக் கொடுத்துக் கொண்டு இருப்பதால் அவைகளுக்குக் கட்டுப்படி ஆகின்றது. இந்தத் தொழிற்சாலைகளை மூடுவதில் எங்களுக்குச் சிறிதும் விருப்பம் கிடையாது. பொருளாதார ரீதியான காரணங்களைத் தவிர வேறொரு காரணமும் இல்லை. 1980' 81–ல் எங்கள் கம்பெனி லாபம் பெற்றது என்று தொழிலாளர்கள் கூறுகிறார்கள். ஆனால் நெல்லிக்குப்பம் யூனிட்டுகளைப் பொறுத்த மட்டில் அவைகள் நஷ்டத்தில் தான் இயங்கி வருகின்றன. மூடுவதாக நாங்கள் எடுத்த முடிவு இறுதியானது. இது எங்களுக்கும் மிக வருத்தம் தரும் விஷயம் தான்'' என்கிறார்பார்கவா. ''ஆலைக்குக் கரும்பு கொடுத்து வந்த 17,000 விவசாயிகளுக்கு நிலத்தில் தற்போது உள்ள கரும்பை விற்றுத் தருவதற்கு கம்பெனி உதவும்'' என்றார் அவர்.

## மூடவேண்டிய அவசியம் இல்லை

நிர்வாகம் சொல்லும் காரணங்களை சி. ஐ. டி. யு. தலைவர் சிந்தன் அவர்களிடம் கூறியபோது அவர் கூறியது:

● 1978-லிருந்து நஷ்டம் என்கிறார்கள். நெல்லிக்குப்பம் யூனிட்டுக்களுக்குத் தனியாக பாலன்ஸ் ஷீட் போடுவதில்லை. மொத்த ஈ. ஐ. டி. பாரி கம்பெனிக்கும் ஒரே பாலன்ஸ் ஷீட்தான். அதன்படி பார்த்தால் 1976-78-ல் 4.57 கோடி நஷ்டம். ஆனால் 1978-ல் இருந்து 1981 வரை 5 கோடியே 71 லட்சம் கம்பெனி லாபம் சம்பாதித்திருக்கிறது. 4.57 கோடி நஷ்டத்தைச் சரிக்கட்டி விட்டு அதிகப்பட்சமாக 2.8 லட்சத்தை 1982 கணக்கிலே காட்ட இருக்கிறார்கள். மேலும் 1980-81-ல் இருந்த கம்பெனி தலைவர்களான திரு. இஸ்லோ ஜான் அவர்களும் திரு. எம். வி. அருணாசலம் அவர்களும் நஷ்டத்தைச் சரிக்கட்ட உதவியது நெல்லிக்குப்பம் தொழிற் சாலைகளும் என்னூர் உரத் தொழிற்சாலையும் தான் என்று கூறியிருக்கிறார்கள். அப்படியிருக்க இப்போது சொல்லும் கணக்கை எப்படி நம்புவது?

● சம்பளம் அதிகம் என்கிறார்கள். உண்மை தான். 1937-ல் இருந்து அதிக சம்பளத்தைப் பெற்று வருகிறார்கள் தொழிலாளர்கள். 1960-ல் சர்க்கரை ஆலைத் தொழிலாளர்களுக்கான சம்பளக் குழு நியமித்த போது, நாங்களும், எங்கள் யூனியனும் சேர்ந்து பேசி முடிவெடுத்துக் கொள்கிறோம் என்று சம்பளக் குழுவுக்குச் சொல்லியவர்கள் இவர்கள்தான்.

● தொழிற்சாலையின் அரவைத் திறன் 2750 டன்னிலிருந்து 4000 டன்னாக 1978-ல் உயர்த்தப்பட்டபோது ஆட்களை நிர்ணயம் செய்வதற்காக நீதிபதி ஜெய் பிரசாத் தலைமையில் டிரிபியூனல் ஒன்று அமைக்கப்பட்டது. அது 1800 தொழிலாளர்களை வேலைக்கு வைத்துக் கொள்ள வேண்டும் என்று கூறியதை அன்று நிர்வாகத்தினர் ஏற்றுக் கொண்டனர். ஆனால் இன்று அதிக ஆட்கள் என்று கூறுகிறார்கள். இப்போது கூட இது சம்பந்தமாக நடுவர் தீர்ப்புக்குப் போக நாங்கள் தயார்.

● கிட்டத்தட்ட 175 இடங்கள் தற்போது காலியாக இருக்கின்றன. அதைப் பூர்த்தி செய்யக் கடந்த ஒரு வருட காலமாக யூனியன் கேட்டுக் கொண்டு வருகிறது. ஆனால் முடியாது என்று சொல்கிறது நிர்வாகம்.

● இவர்கள் சொல்லும் நஷ்டக் கணக்கை ஏற்றுக் கொள்வதாக வைத்துக்கொண்டாலும் 1978-ல் 551.88 லட்சமாக இருந்த நஷ்டம் 1982-ல் 134.19 லட்சமாகக் குறைந்திருக்கிறது. இன்னும் இரண்டு மூன்று வருடங்களில் நஷ்டமே இல்லாதவாறு இயங்க முடியாதா?

மொத்தத்தில் இவர்கள் மூடுவதற்கு முடிவெடுத்த காரணம், காலியான இடங்களைப் பூர்த்தி செய்ய விருப்பம் இல்லாததுதான். மூடுவேன் என்று மிரட்டுவதன் மூலம் தொழிலாளர்களைப் பணிய வைத்துவிடலாம் என்று நினைக்கிறார்கள்.

நெல்லிக்குப்பம் தொழிற்சாலையில் வந்த லாபத்தை வைத்துக் கொண்டு வேறுபல தொழில்களைத் துவக்கிய நிர்வாகம், இன்றும் கோரமண்டல் உரத்தொழிற்சாலையிலும் ஹாண்டில்லா கெமிகல்ஸிலும் நிறைய மூலதனத்தைப் போட்டிருக்கிறது. ஏற்கனவே வறட்சியில் பாதிக்கப்பட்டுள்ள தென் ஆற்காடு விவசாயிகள் இந்த ஆலைகளை மூடினால் மேலும் பாதிப்புக் குள்ளாவார்கள். எனவே, அரசாங்கம் மிக உறுதியாக நின்று தொழிற்சாலைகளை மூடக் கூடாது என்று கூற வேண்டும்.

—நமது நிருபர்

---

## காதல் வலை!

கோவை மாவட்டத்தில் தெக்குப்பாளையம் என்ற ஊரில் பருத்தி சாகுபடி ஏராளமாக நடைபெறுகிறது. பருத்தியை ஆண் பூச்சிகள் ஏராளமாய் வந்து நாசம் செய்கின்றன. ஆகவே இவற்றைக் கொல்லக் காதல் வலை விரிக்கின்றனர். ஆண் பூச்சிகள், பெண் பூச்சிகளிடமிருந்து வெளிவரும் ஒருவகை மணத்தை மறிந்துகொண்டு அவற்றை நாடி அலையும். அத்தகைய மணம் கொடுக்கும் 'ஊக்கி'களை விஞ்ஞானிகள் செயற்கை முறையில் தயாரித்து அதனுடன் பிசின் கலந்து ஒரு அட்டையின் மீது தடவி அந்த அட்டைகளைப் பருத்திக் காட்டில் வைக்கின்றனர். ஆண் பூச்சிகள் இந்த மணத்தை முகர்ந்து ஏமாந்து அட்டைக்குப் போய் அதன் மேல் ஒட்டிக் கொண்டு மீள முடியாமல் இறந்து விடுகின்றன. இந்தச் செயல் முறைக்கு 'காதல் வலை' எனப் பெயரிட்டுள்ளனர்!

—ராஜி ராதா



# சீறும் சிங்கங்கள்



''ராஜாதி ராஜ, ராஜகம்பீர, சூராதிசூர, வீராதி வீர, திரிபுவனச் சக்கரவர்த்தி வருகிறார் பராக்.... பராக்.''

''திரிபுவனச் சக்கரவர்த்தி...''

''வாழ்க!''

''அமருங்கள், அனைவரும் அமருங்கள்.... இன்றைய ஆலோசனை மண்டபம் கூடியதன் காரணம், நாட்டின் கலையின் நிலை பற்றி அமைச்சர் ஏதோ தெரிவிக்க வேண்டும் என்று சொன்னதால்தான்... அமைச்சரே!''

''மன்னா....''

''சொல்லுங்கள் அமைச்சரே....''

''தயவு செய்து திரைப்படங்கள் பற்றிய ஆலோசனைக் குழுவிலிருந்து என்னை நீக்க வேண்டும்மென்று விண்ணப்பிக்கிறேன் மன்னா''

'அமைச்சரே, என்ன ஆயிற்று? எதற்கு இந்தக் கலக்கம்?''

''மன்னா, சீறும் சிங்கங்கள் என்ற திரைப்படத்தைக் காண நேற்றிரவு நான் மாறு வேடத்தில் சென்றிருந்தேன்.'

''ஆஹா.... சீறும் சிங்கங்கள்... செவி மடுக்கையிலேயே என் தோள்கள் தினவெடுக்கின்றனவே....''

''அப்படித்தான் மன்னா நானும் ஏமாந்துபட்டேன்.... சிறிது நாட்களுக்கு முன்பு சகல கலா வல்லவன் என்ற ஒரு திரைக்காவியத்தை நாம் பொது மண்டபத்தில் கண்டோமே. நினைவிருக்கிறதா மன்னா?'

''ஆம்....ஆம்...''

''அந்த மயிலைப் பார்த்து வான்கோழி பழிப்புக் காட்டுகிற மாதிரியான படம்தான் மன்னா இது....'

''அந்தப் படத்தையே நாம் ரசிக்கவில்லையே.....''

''நமது கிராமத்து மக்களை முட்டாள்களாய் முன் பாதியில் சித்திரித்து, பின் பாதியில் அவர்கள் மற்றவர்களை முட்டாளாக்கும் அதே கதை மன்னா... சில சம்பவங்களும், பாடல்களும் இரண்டாந்தர நகல்கள் அரசே... கதை எத்தனூர் என்னும் ஏமாற்றுக்காரப் பட்டணத்தில் துவங்குகிறது... நிழலுக்கு வாடகை கேட்கும் வீட்டு உரிமையாளர், குளத்தில் நீராட வெள்ளிப் பணம் கேட்கும் குத்தகைக்காரர், பயனிழந்த பணத்தை ஏமாற்றும் ஏழைகளுக்கு ஈந்து ஏமாற்றும் பண்ணையார், அவரின் இரு பட்டணத்துப் புதல்விகள், ஊருக்கு வரும் நான்கு அப்பாவிகள், ஆறு தூங்குகிறதா விழித்திருக்கிறதா என்று புகைக் கொள்ளியை நீரில் நனைத்துப் பார்க்கும் பஞ்ச தந்திர காலத்துப்புத்திசாலிகள், சென்றும் வேட்டியுமாய், பகுத்தறிவில்லாத பாட்டும் கும்மாளமுமாய் பாடல்கள், பண்ணையாரின் புதல்விகளை இந்த அப்பாவிப் பிள்ளைகள் இருவரும் காதலிக்க...''

''அமைச்சரே'' நிறுத்தும்....சுற்றுகிறது தலை.....!

''மன்னிக்க வேண்டும் அரசே, எஞ்சியுள்ளதையும் அவையோருக்கு எடுத்துக் கூறக் கடமைப்பட்டிருக்கிறேன்... பின் பகுதியில் குழாய் மாட்டி, செம்பட்டைத் தலையுடன் அந்த அப்பாவிகள் அதே பாடல்களை மறுபடியும் இசைக்கிறார்கள். இதில் சிறக்கு என்ற பார் புகழும் நாட்டியக்காரிக்கு மாற்றாக அனுராதா என்பவரை அதே மாதிரி அரை குறை ஆடைகளோடு அலங்கோலமாக ஆட விட்டிருக்கிறார்கள்....'

''மற்ற கலைஞர்கள் பற்றி?''

''தனித்தனியே குறிப்பிடுகிறமாதிரி எந்தக் கலைஞரும் இல்லை மன்னா...அசடுவழிகிற சேகரும் பெண்களை உப்பு மூட்டை தூக்கும் சுரேஷும், வேற்று நாட்டு யுத்த முறையைக் காட்டும் மணி என்பவரும் இருக்கிறார்கள், செல்வத்தை வாரி இறைத்து அட்டை மாளிகைகள் கட்டியிருக்கிறார்கள் அரசே....''

''இயக்குநரை இழுத்து வாருங்கள், அவருக்குக் கடுந் தண்டனையாய், இந்த மாதிரி திரைப்படங்களைப் பரிசீலிக்கும் குழுவிற்குத் தலைவனாக்குகிறேன்.... இத்துடன் இன்றைய சபை கலைகிறது...''

''ராஜாதி ராஜ, ராஜ கம்பீர....''

—ஜெய மன்மதன்













பாரதீய ஜனதா தலைவர்கள், மதுரை நெடுமாறன், மதுரை ஆதீனம் மீது அண்ணாமலையில் தாக்குதல் நடை பெற்றுள்ளது!



கல்கி



1983 ஜூலை 10
ருத்ரோத்காரி ஆனி 26
மலர் : 41 இதழ் : 50



# ஐந்தாவது வல்லரசு

உலகின் ஐந்தாவது வல்லரசு என்று பத்திரிகைகளை வர்ணித்தான் நெப்போலியன். ஆனால் அவன் விஷயத்திலேயே பத்திரிகைகள் அடிமைப் புத்தியைத்தான் காட்டின என்று சரித்திரமே பேசுகிறது. எல்பா தீவில் சிறை வைக்கப்பட்டிருந்த நெப்போலியன் அங்கிருந்து தப்பிப் பெரும் படையுடன் பாரீஸை மீண்டும் கைப்பற்ற வந்தபோது முதலில், ''மிருகம் கூண்டை விட்டுத் தப்பிவிட்டது'' என்று தலைப்புப் போட்ட பத்திரிகைகள் அடுத்தடுத்த நாட்களில் ''அரக்கன்'', ''கொடுங்கோலன்'' என்றெல்லாம் அவனை வர்ணித்தன. ஆனால் பாரீஸை அவன் நெருங்க, நெருங்க சுருதி மாறி ''போனபார்ட்'' என்றும் ''மகாராஜ''னென்றும் ''விடுதலை வீரன்'' என்றும் புகழ ஆரம்பித்துக் கடைசியில் ''சக்கரவர்த்திப் பெருமான் பாரீஸில் நுழைந்தார்! மாமன்னன் நீடூழி வாழ்க!'' என்று தலைப்பிட்டன!

ஆகக்கூடி அன்றும் சரி, இன்றும் சரி, பத்திரிகைகள் சுதந்திரமாக இயங்குவதை விட ஆட்சியிலிருப்போருக்கு அஞ்சி நடப்பதுதான் அதிகம். பதவி ஆசை, பண ஆசையால் வசீகரிக்க முடியாதவர்களைக்கூட அதிகார பலத்தைக் காட்டி அச்சுறுத்த முடியும். இந்தச் சூழ்நிலையில் பத்திரிகையாளர்களைத் தண்டிக்க அரசு விசேஷ அதிகாரங்களை மேற்கொள்வது பத்திரிகை சுதந்திரத்தைக் குழிதோண்டிப் புதைக்கும் காரியம்தான். மக்கள் பிரதிநிதிகளின் ஆதரவுடன்தான் இத்தகைய சட்டங்கள் கொண்டுவரப்படுகின்றன என்றாலும், இது ஜனநாயகப் போர்வையில் நடக்கும் யதேச்சாதிகாரமே. பீகாரில் பத்திரிகைகள் கட்டுப்பாடு சட்டம் வாபஸ் பெறப்பட்டது. அதற்கு வழிகாட்டியாக இருந்த தமிழ் நாடு சட்டமும் ஒரு போராட்டத்தின் விளைவாக அண்மையில் வாபஸ் பெறப்பட்டுள்ளது. பத்திரிகையாளரை வாரண்ட் இன்றிக் கைது செய்யவும், ஜாமீனில் வெளிவர இடமின்றியும் விசாரணையின்றியும் காவலில் வைத்திருக்கவும் வழிசெய்த இந்தச் சட்டம் இந்திய ஜனநாயகத்துக்கே மானக்கேடானது. ஜேம்ஸ் மாடிஸன் என்ற அறிஞர் கூறினார்: ''பத்திரிகை சுதந்திரத்தைத் துஷ்பிரயோகம் செய்வதென்பது ஓரளவு இருக்கவே செய்யும். ஆனால் சில கிளைகள் கோணலாக இருக்கின்றனவே என்று வெறுத்து வெட்ட ஆரம்பித்தோமானால் அந்த மரத்திலிருந்து நமக்கு நல்ல பழங்களே கிடைக்காமல் போய்விடும்!'' இதை உணர்ந்து ஒரு கொடிய சட்டத்தை விவேகத்துடன் வாபஸ் பெற்றுள்ள முதல்வரை, அவர் முதலில் காட்டிய பிடிவாதத்தை மறந்து பாராட்டுகிறோம்.

பத்திரிகைகளுக்கு எழுத்து, கருத்துச் சுதந்திரம் இருந்தால்மட்டும் போதாது. பொருளாதார ரீதியாகவும் நிர்வாக ரீதியாகவும் பூரண சுதந்திரம் தேவை. பத்திரிகைக் காகிதம், அச்சு யந்திரம், இதர உபகரணங்கள் முதலியவற்றை வாங்குவது, விற்பது, விளம்பரங்கள் பிரசுரிப்பது போன்றவற்றில் உள்ள சகல விதமான கட்டுப்பாடுகளும் நீங்க வேண்டும். அப்போதுதான் உண்மையான பத்திரிகைச் சுதந்திரம் இங்கு இருப்பதாகக் கருத முடியும். அதுவரை அதிகார வர்க்கத்துக்குப் பத்திரிகைகள் அடங்கி நடக்க வேண்டிய நிலைதான் நீடிக்கும்.

ஜெஃபர்ஸன் சொன்னார்: ''பத்திரிகைகளே இல்லாத அரசா, அல்லது அரசாங்கமே இல்லாமல் பத்திரிகைகள் மட்டுமா என்று கேட்டால் நான் தயக்கமின்றி இரண்டாவதைத்தான் தேர்ந்தெடுப்பேன்!''

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா -பாரதியார்

# துங்ககிரியானுக்குத் தங்கக்கோயில்

ஆனந்தி



○ மூலவரும் உற்சவரும்

ஏழுமலையாண்டவனுக்குத் தமிழ் நாட்டில் பல கோவில்கள் இருக்கின்றன. அவற்றைத் தக்ஷிண திருப்பதி என்றே கூறுகிறார்கள். இப்போது ஸ்ரீ வேங்கடேசப் பெருமானின் புகழ் உலகமெங்கும் பரவி அமெரிக்காவில் கூட அவருக்கு ஒரு கோவில் அமைந்து விட்டது. பம்பாயிலும் ஒரு வேங்கடாசலபதி கோவில் இருக்கிறது.

'பொன் வேய்ந்த பராந்தகன்' என்று சபாபதியின் கூத்தம்பலத்தைப் பொன் ஓடுகளால் அழகு செய்த சோழ மன்னரைச் சிறப்பித்துக் கூறுவது வழக்கம்.

சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு ஒரு கோவில் முழுவதற்குமே தங்கக் கவசம் சாத்தி ஆனந்தப்பட்டிருக்கிறார் ஒரு மன்னர். ஹைதராபாத் நகரத்துக்கு அருகில் ஆல்வால் என்னுமிடத்தில் அமைந்துள்ள பாலாஜி கோவிலில் தங்கத் தகடு பதித்திருக்கும் அதிசயத்தோடு இன்னும் சில அதிசயங்களையும் காண்கிறோம். ஆந்திரப் பிரதேசத்தின் இதய ஸ்தானத்தில் ஸ்ரீ வேங்கடேசப் பெருமானுக்கு ஒரு கோவில் கட்டப்பட்டிருப்பது ஒரு அதிசயமில்லைதான். நம்மை ஆனந்தத்தில் மூழ்கடிக்கக் கூடிய வேறு சில அதிசயங்கள் இங்கே விளங்குகின்றன.

பிராகாரச்சுற்றில் அமைந்துள்ள தாயாரின் கருவறையின் அருகே ஸ்ரீ ஆண்டாளின் செப்புப் படிமம் ஒன்று இருக்கிறது. இந்தக் கோதை நாச்சியார் வழக்கமான சாயக் கொண்டையுடனோ சற்றுச் சாய்ந்த கிரீடத்துடனோ காணப்படவில்லை. நேர் வகிடு எடுத்து வாரப்பட்ட முன் நெற்றியுடன் அடர்ந்த கூந்தலை உடையவளாகக் காணப்படுகிறாள். முகத்தில் கள்ளங் கபடமற்ற சிறுமியின் களை சொட்டுகிறது. கையில் கிளியை ஏந்தியிருக்கும் அழகைப் பார்ப்பதா? அவள் ஒய்யாரமாக நிற்கும் அழகைப் பார்ப்பதா? இடது கரம் டோலா ஹஸ்தமாக விளங்கும் அழகைக் கண்டு களிப்பதா? பால் வடியும் வதனத்தில் குறுஞ் சிரிப்பைப் பார்த்து மகிழ்வதா? கண்ணனுடைய பால லீலைகளைத் தந்தையார் சொல்லக் கேட்டு மகிழ்ந்து சிரித்த கோதை இப்படித்தான் இருந்திருக்கவேண்டும். ''கண்ணே! வாம்மா!'' என்று பாசத்துடன் கூப்பிட்டுக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு வந்துவிடலாம் என்று ஆசையாக இருக்கிறது. அவ்வளவு ஜீவகளை!

சூடிக் கொடுத்த சுடர்க் கொடி உடுத்தியிருக்கும் நவீன பிரிண்டட் ஸாரிதான் பொருத்தமாக இல்லை. கரும் பச்சை உடலும் குங்கும வண்ணத்தில் ஜரிகை இழைத்த கரை போட்ட பட்டுப் பாவாடையும் உடுத்தினால் எத்தனை அழகாக இருக்கும் என்று மனம் கற்பனை செய்கிறது. அவள் காதலுடன் அணிந்து அழகு பார்த்த கதம்ப மாலையையும் அணிவித்தால்....!

கோதை நாச்சியாரின் வலது பக்கத்தில் ஆழ்வாராதிகள் ஸந்நதி. பெரியாழ்வார்

○ ஸ்ரீவேணுகோபாலன் — கோபியுடன்



நம்மாழ்வார், திருமங்கையாழ்வார், வேதாந்த தேசிகர், ஸ்ரீ ராமானுஜர்.

தமிழ் நாட்டில் உதித்துத் தெய்வத் தமிழில் உடல் உருக, உளம் உருக, ஊனெல்லாம் நெக்குருகப் பாடி தெய்வ மணம் கமழச் செய்தசெம்மல்களாகிய இவர்களுக்கு ஆந்திரப் பிரதேசத்தில் உள்ள விண்ணகரத்தில் சந்நிதி. பள்ளி கொண்ட பெருமாளையே ஆண்டு கொண்டவளான ஸ்ரீ ஆண்டாளின் பிறந்த நாளான ஆடிப்பூர உற்சவம் இங்கே நடக்கிறது. மார்கழி நோன்பு நடக்கிறது. மற்ற ஆழ்வார்களின் ஜன்மநட்சத்திரங்களில் உற்சவம் நடைபெறுகிறது. இவையெல்லாம் தெலுங்கு ராஜ்ஜியத்தில் நடைபெறுகின்றன. ''ஆல்வால்'' என்ற பெயர் ஆழ்வார் என்ற தமிழ்ச் சொல்லின் திரிபாக இருக்கக் கூடுமோ?

இதுவல்லவா தேசிய ஒருமைப்பாடு? மொழிப் பிரிவினையும், பிரதேசப் பிரிவினையும் அரசியல்வாதிகளின் பொழுது போக்குத் தான். நமது பண்பாடும் நமது மதத்தின் பரந்த விசால நோக்கும் பாரத மக்களை இணைத்து, நாட்டில் அன்பும் அறமும் தழைத்தோங்கச் செய்து வருகிறது என்ற எண்ணம் நமக்கு ஒரு புதிய தென்பும், நம்பிக்கையும் அளிக்கிறது.

இந்தக் கோவிலைக் கட்டியவர் ராஜா சந்துலால் என்ற மன்னர் என்று அறிகிறோம். இவர் கோவிலைக் கட்டுவதற்கு முன்னால் ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

விஷ்ணு பாலாஜி என்ற ஒரு பரம பக்த சிகாமணி காசிக்குப் போகும் எண்ணத்தோடு தீர்த்த யாத்திரை செய்து கொண்டு வரும்போது இந்த இடத்துக்கு வந்துசேர்ந்தார். ஒரு பெரிய கிணறும், நிழல் தரும் புளிய மரத்தடியும் அவருக்குத் தங்கப் போதுமானதாக இருந்தது. இந்த இடத்தில் ஏதோ ஒரு சாந்நித்யம் இருந்திருக்க வேண்டும். ஸ்ரீ விஷ்ணு பாலாஜி தாம் வழிபட்டு வந்த தெய்வத்தைப் புளிய மரத்தடியில் வைத்துப் பூஜை செய்து வந்தார். நாளடைவில் அவருடைய புனிதமான பக்தி மக்களை சர்க்கவே பலர் வந்து அவரையும் தெய்வத்தையும் வழிபடத் தொடங்கினார்கள். கார்த்திகை மாதத்துப் பௌர்ணமியில் வண்டி கட்டிக் கொண்டு வந்து மக்கள் அங்கே தங்கி வழிபட்டு மறு நாள் காலை வண்டியோடு புளிய மரம், குண்டம் இரண்டை



○ தங்கக் கோவில்

யும் பிரதட்சிணம் செய்து திரும்புவார்களாம். (இன்றும் இந்த வழக்கம் தொடர்கிறது என்று கூறினார் திரு கோபாலச்சாரியார் என்ற கோவில் அர்ச்சகர்.)

விஷ்ணு பாலாஜியின் புகழ் ராஜா சந்துலாலைக் கவர்ந்தது. அவரும் அவருடைய அன்னையும் சுவாமிகளைத் தரிசிப்பதற்காக வந்து தங்கினார்கள். மூன்றாவது நாள் இரவில் அரசர் கனவில் திருவேங்கடநாதன் தோன்ற, ''திருப்பதிக்கு நேர்ந்துகொண்டு அங்கு போக முடியாமல் திண்டாடும் பக்தர்கள் என்னை வழிபடுவதற்கு வழி செய். இங்கே எனக்கு ஒரு ஆலயம் எழுப்பு'' என்று கூறினாராம். இப்படி தனக்கு ஒரு அன்புக் கட்டளை இட்டதை எண்ணி மனம் பூரித்த ராஜாசந்துலால் உடனே பணியைத் தொடங்கினார். சுவாமிகளின் ஆசியோடு இலட்சக் கணக்கான ரூபாய் செலவு செய்து கோயிலை நிர்மாணித்து விட்டார்!

மிகவும் பிரயாசைப்பட்டுத் திருப்பதி மலையில் பல நூற்றாண்டுகளாகப் பூஜிக்கப்பட்டு வந்த 'போகமூர்த்தி' விக்ரஹத்தை மேள தாளம் முழங்க, விருதுகள் பின் தொடர்ந்துவர, சகல உபசாரங்களுடன் அழைத்து வந்து வழிபாட்டுக்குரிய தெய்வமாக விளங்கச் செய்தார். அது முதல் திருப்பதி மலைக்கு வருவதாக வேண்டிக் கொண்டு போக முடியாதவர்கள் ஆல்வால் கோவிலில் வேண்டுதலைச் செலுத்துவதுவழக்கமாக இருக்கிறது.

○ காளிங்கன் மீது கண்ணன், நாககன்னிகைகள்



ராஜா சந்துலால் கோவில் கட்டிக் கும்பா பிஷேகம் செய்ததோடு நில்லாமல் ஹைதராபாதை அப்போது ஆண்டு வந்த நிஜாமிடம் சொல்லி கோவிலுக்கு ஜாகீர்களை வாங்கிக் கொடுத்து நித்திய பூஜைகளும் உற்சவங்களும் குறைவில்லாமல் நடக்க ஏற்பாடுகள் செய்தார்.

புளிய மரத்தடியில் சிறிய கோவில் கட்டப் பட்டிருக்கிறது. இதுதான் ஸ்ரீ விஷ்ணுபாலாஜி சுவாமிகள் பூஜித்த இடம். இங்கேயும் நித்திய பூஜைகள் நடக்கின்றனவாம்.

புளிய மரத்தின் பின்னால் கோபுர வாயில். உள்ளே செல்லும் போது ''ராஆ ஆ மரா ஆ ஆம்'' என்று ஒரு பக்தர் தானம் பாடுவது போல ஜபம் செய்கிறார். அந்த நாமத்தின் ஒலி, குரலின் கரகரப்பையும் மீறி நம் மனத்தை ஒருமைப்படுத்துகிறது.

சிறிய கோவில்தான், நிலைப்படிகளெல்லாம் வெள்ளிக் கவசம் சாத்தப்பட்டுத் திகழ்கிறது.

கருவறையைச் சுற்றியுள்ள சுவர்களும் கோபுரமும் தங்கத் தகடு சாத்தப்பட்டுப் பொலிகிறது.

தகடு என்றால் வெறும் தகடாக இல்லை. மூன்று புறங்களிலும் கண்ணபெருமானுடைய லீலைகள் பதிக்கப்பட்டிருக்கின்றன. பிராகாரத்தில் வலம் வரும்போது ஒரு பக்கம் வெண்ணெய்க் கையுடன் கண்ணன் விளையாட்டுக் கோலத்தில் நிற்பதைக் காண்கிறோம். இரு புறமும் கருடாழ்வாரும் ஹனுமானும் வணக்கத்தோடு நிற்கிறார்கள்.

பின் பக்கத்தில் நாக கன்னிகைகள் கை கூப்பித் துதிக்கக் காளியன் தலைமேல் நர்த்தனமாடும் கண்ணன். மற்றொரு புறம் வேணுகோபாலனும் கோபிகளும்.

கோபுரத்தில் மாயக் கண்ணனின் பல்வேறு லீலைகள் சித்திரிக்கப்பட்டிருக்கின்றன. சித்திர விசித்திர வேலைப்பாடுகளுக்கும் குறைவில்லை. உச்சியில் கலசத்துக்குப் பதிலாக சுதர்சனரின் சக்கர வடிவம் காணப்படுகிறது. தர்ம சக்கரம். இடராழியை நீக்கும் சக்கரம். அடியார்களைக் காக்கும் சக்கரம். அதனால் வேங்கடநாதனின் உச்சியிலேயே உன்னத ஸ்தானத்தைப் பெற்றிருக்கிறார் சக்கரத்தாழ்வார்.

Vowels என்றுகூறப்படும் ஐந்து எழுத்துக்களும் இடம் பெற்றுள்ள ஒரே ஆங்கிலச் சொல் Education என்பது தான்!

ஆதாரம்: Play with words
—நந்தலாலா




அதன் கீழ் தசாவதாரக் கோலங்கள். வலம் வந்து சந்நிதியை அடைந்து திவ்ய மூர்த்திகளின் திருமேனியின் காந்தியில் மனம் லயிக்க, ஆரவாரமில்லாமல் கண் குளிரத் தரிசனம் செய்கிறோம்.

ஸ்ரீதேவி—பூதேவி சமேதராக மூர்த்தி. பின்னால் மூலவர். தீபாராதனை காட்டும் போது சுடரின் ஒளியில் போக மூர்த்தியின் எழில் வதனம் பளிச்சென்று தெரியும்போது திருப்பதியிலேயே இருப்பதாக நினைத்து மனம் பூரிக்கிறது.

தாயார் சந்நிதிக்குச் சென்றதும் ''அலமேலு மங்கா'' என்று அர்ச்சகர் கூற மறுபடியும் அலர்மேல் மங்கை என்ற அழகிய தமிழ்ப் பெயர் உண்டாக்கும் உவகையுடன் மகாலட்சுமியை மனமார வணங்கி வந்தனை புரிகிறோம். இங்கேதான் ஆண்டாள் குழந்தையாக வசிகரம் செய்கிறாள்.

ஆழ்வாராதிகளைத் தரிசனம் செய்த மனக் களிப்போடு திரும்பும்போது கோபுர வாசல் அருகில் ஒரு சந்நிதியைக் காண்கிறோம். ராஜா சந்துலால் அவர்களுடைய அன்னையார் சிவ பெருமானிடம் பக்தி கொண்டவர். ஆதலால் அன்னை வழிபடுவதற்காக முன்னால் மஹாதேவ மூர்த்திக்கும் சந்நிதி அமைத்திருக்கிறார்.

அகோபில மடத்து சம்பிரதாயப்படி இந்தக் கோவிலில் பூஜை முறைகள் நடத்தப்பட்டு வருகின்றன. அகோபில மடத்து ஜீயர் ஸ்வாமிகள் இந்தக் கோயிலில் ஈடுஉடையவர் என்று கூறினார் திரு கோபாலாச்சாரியார் அவர்கள். சிருங்கேரி பீடத்து ஆச்சாரியாளும் இங்கு வந்து தரிசனம் செய்து மகிழ்ந்திருப்பதாகக் கூறினார்கள்.

அவருக்கு ஒரு குறை. ஜாகீர் ஒழிப்புத் திட்டம் அமலுக்கு வந்தபோது கோவிலுக்கு அதற்கு ஈடாக ரூ. 10,684 ஆண்டு தோறும் கொடுக்க வேண்டுமென்று அரசாங்கம் நிர்ணயம் செய்தது. விலைவாசிகள் எட்டாத உயரத்தில் பறக்கும் இந்தக் காலத்திலும் இதே தொகையை வைத்துக் கோவிலை நடத்த வேண்டியிருக்கிறது என்று வருத்தப்பட்டார்.

இந்தக் கோவிலைச் சுற்றிப் பல சிறிய கோவில்கள் இருக்கின்றன. குண்டம்ஜி கோயில், ராதாகிருஷ்ணர் கோவில், குருரத்த சாஹேப் கோவில், பண்டரிநாதர் கோவில், ஹனுமான் கோவில் இவை யெல்லாம் இந்தக் கோவில் வருமானத்திலிருந்தே பராமரிக்கப்படுகின்றன.

இந்தக் கோவிலைக் கட்டியவர் க்ஷத்திரியர். கட்டக் காரணமா யிருந்தவர் பிராமணர். ஜாகீர் அளித்தவர் இஸ்லாமிய மதத்தைச் சேர்ந்த அரசர். கொண்டாடப்படுபவர்கள் தமிழ்க் கவிதையால் பக்தி மணம் பரப்பிய ஆழ்வார்கள். குடி கொண்டவர் வேங்கடாசலபதி. எனவே இதை ஒரு அதிசயக் கோவில் என்றுதான் சொல்ல வேண்டும்.

ஒருப்படைந்து தங்கள் புலன் ஐந்தும் சென்று
தெருப்படைந்து நீர் அடைய வேண்டா—
விருப்படைந்து
''மைதங்கும் வேங்கடவா'' என்பார்க்கு
வைகுமே
வைகுந்தம் சிந்தையுளே வந்து.

## 24

அத்தை வியப்புடன் அவனைப் பார்த்தாள்.

''தேப்பெருமாள் நல்லூருக்கா? என்ன திடீர்னு?''

அவளைப் பார்த்துப் பதில் சொல்லத் தெம்பில்லாமல் அவள் மேஜை மேல் வைத்த தமிழ்ப்பத்திரிகையைக் கையில் எடுத்து அதைப் புரட்டியபடியே அவன் சொன்னான்.

''என்னவோ போகணும் போல இருக்கு. இந்த டில்லியை மறந்து, வேலையை மறந்து கொஞ்ச நாள் எங்கேயாவது போய் இருக்கலாம்னு தோணறது. அதுக்கு உங்க கிராமத்தை விட நல்ல இடம் கிடைக்காது.''

''ஊத்து ஜலம் அங்கே. தாராவுக்கும் குழந்தைக்கும் ஒத்துக்குமா?''

''நான் மாத்திரம்தான்போறேன் அத்தே! குழந்தைக்கெல்லாம் அங்கே சௌகரியப்படாது.''

அத்தை சில விநாடிகள் கழித்துக் கேட்டாள்.

''ஆபீஸ்ல ஏதாவது தகராறு?''

அந்தக் குரலில் தொனித்த கனிவினால் அவன் நெகிழ்ந்து சிரித்து மழுப்பினான்.

''அதெல்லாம் இல்லே அத்தே. நாலு மாசமா ரொம்ப வேலை. அலுத்துப் போச்சு. கொஞ்ச நாள் தனியா எங்கேயாவது இருக்கணும் போல இருக்கு.''

''சரி, போயிட்டு வா. ஊருக்குக்கடுதாசி போடறேன். நம்ம எதிர்த்த வீட்டு ராமமூர்த்தி கிட்டச் சாவி கொடுத்திருக்கேன். அப்பப்ப வீட்டைச் சுத்தம் பண்ணி வைக்கணும்னு. என்னிக்குப் போய்ச் சேருவேன்னு எழுதட்டும்?''

''எழுத ஒண்ணும் வேண்டாம் அத்தே. நாளைக்கே நான் ப்ளேன்லே மெட்ராஸுக்குப் போறேன்.''

அத்தை அவனை அளக்கிற மாதிரி பார்த்தாள்.

''அடுத்த மாசம் இருபத்தி ரெண்டாம் தேதி குழந்தைக்கு ஆண்டு நிறைவு. அதுக்குள்ளே வந்துடுவியோன்னோ?''

மனசு சற்றுக் குலுங்கிற்று.

எப்படி ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாள். அதைத் தவிர வேறு நினைவு இல்லாதவள் போல!

''வந்துடுவேன்'' என்றான் அவசரமாக. ''எல்லாரும் எப்படி இருக்கேள்? அம்மா, மன்னி எங்கே?''

''இரண்டு பேரும் யார் வீட்டுக்கோ மஞ்சள் குங்குமத்துக்குப் போயிருக்கா. உங்கம்மாவுக்குக் கொஞ்சம் உடம்பு சரியாயில்லே.''

''என்ன உடம்பு?'' என்றான் அவன் கவலையுடன்.

''கர்ப்பப் பையிலே ஏதோ கோளாறு போலிருக்கு. லேடி டாக்டர் கிட்ட அழைச்சின்டு போகணும்.''

''ஏன் முன்னாடியே சொல்லல்லே?''

''இப்பத்தான் உங்கம்மா வாயைத் திறந்து சொல்றா. தாராவை அழைச்சின்டு போகச் சொல்றியா?''

''ஆகட்டும்'' என்று அவன் கிளம்பினான்.

''செலவுக்குப் பணம் வேணுமா அத்தை?''

''வேண்டாம், வேண்டாம். நீ கொடுக்கற பணத்தை அப்படியே பாங்கிலே போட்டு வெச்சிருக்கான் அண்ணா. ஒரு பைசாகூடத் தொடாம. வேண்டி



## ஒரு சங்கமத்தைத் தேடி

யிருந்தா அதிலேந்து எடுத்துண்டாப் போச்சு!''

''அப்பாவுக்கு ஆனாலும் சுய கௌரவம் ஜாஸ்தி அத்தே!''

''உனக்கில்லையா?''

மனசு மறுபடி குலுங்கிற்று. இன்றைக்கு யதார்த்தமான வார்த்தைகளுக்கும் விபரீதமான அர்த்தம் தெரிந்தது.

சுய கௌரவம்தான் இப்படி நம்மை அலைக்கழிக்கிறதா?

தாரா எப்படி இத்தனை லகுவாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டிருக்கிறாள்? ஊர் உலகத்தில் நடக்கும் அக்கிரமங்களுக்கெல்லாம் ரோசப்படுபவள்! அன்று ரூபாவுக்காக எத்தனை ஆத்திரப்பட்டாள் — தனக்கே ஏற்பட்ட அவமானம் போல்!

சடாரென்று இப்போது புரிந்தது. அதற்கெல்லாம் பின்னணியில் அவளது அந்த அனுபவமும், அதன் விளைவும், துக்கமும்தான் காரணமாக இருந்திருக்க வேண்டும். ரூபாவின் மூலம் அவற்றிற்கு வடிகாலைத் தேடியிருக்க வேண்டும்....

'இட் இஸ் தி பயாலஜிகல் டிஃபரன்ஸ் தட் மேக்ஸ் தி வுமன் வீக்!' அந்தப் பௌதிக வித்தியாசத்தின் பலவீனத்தினால்தான் ஒரு கயவனுக்காக இன்று இவள் சிசுவைச் சுமக்கிறாள்!

சுமக்கட்டும்!

நானும் எப்படிச் சுமப்பது?

அன்னியனின் ரத்தத்தை இதோ உங்கள் குலத்தின் வாரிசு என்று என் பெற்றோருக்கு மனசறிந்து எப்படிப் பொய் சொல்வது? அதுவும் எந்த மாதிரிப் பெற்றோர்!

அவன் எங்கெல்லாமோ அலைந்து திரிந்து வெகு நேரம் கழித்து வீட்டுக்குச் சென்றான்.

சாப்பிட்டாகி விட்டது என்று நேரே படுக்கைக்குச் சென்றான். குழந்தை படுத்திருக்கும் சின்னக் கட்டில் பக்கமே பார்வையைத் திருப்பாமல் அவன் படுக்கச் சென்றதும்,



''முன்னேயெல்லாம் தினமும் லைப்ரரிக்கு வந்து தூங்குவீங்களே... இப்ப ஏன் வர்றதில்லே?''

''எனக்கு இப்ப வேலை கிடைச்சிருச்சிங்க!''

—எம். பாஸ்கர்

'அந்தக் குழந்தை என்ன குற்றம் செய்தது' என்ற கேள்வி மனத்தில் தோன்றித் தேங்கி நின்றது. வெகு நேரம் தூக்கம் வராமல் புரண்டு, சொற்ப நேரம் தூங்கி அவன் விழித்துக் கொண்டான்.

வீடு எப்போதும் போல இருந்தது. வரவேற்பறை சோபாவில் உட்கார்ந்தபடி தாரா பேப்பர் படித்துக் கொண்டிருந்தாள். வீட்டின் ஒரு மூலையில் வேலைக்காரப் பெண்ணுடன் ஏதோ ஒரு ஹாஸ்யப் பரிமாறலில் குழந்தையின் கிண்கிணிச் சிரிப்புக் கேட்டது. அதைக் கேட்ட மாத்திரத்தில் மனசு இளகி இளகித்துப் போகாமல் கூம்பிக் கொண்டதிலிருந்து நேற்றைக்கும் இன்றைக்கும் ஏற்பட்டுப் போன வித்தியாசம் பளிச் சென்று புரிந்தது. அவன் சோர்வுடன் எழுந்து, பல் துலக்கி ஏதோ ஞாபகத்தில் குளிக்க ஆரம்பித்து, வாய் இயந்திர கதியில்

''நினைந்து நினைந்துணர்ந்துணர்ந்து
நெகிழ்ந்து நெகிழ்ந்தன்பே
நிறைந்து நிறைந்துற் றெழுங்
கண்ணீரதனுடம்பு.....''

என்றதும் கரகரவென்று கண்களிலிருந்து நீர் வழிந்தது. குழாய்த் தண்ணீர் வழியும் ஓசைக்குள் அடங்கிப் போகும் என்கிற தைரியத்தில் அவன் வெட்கமில்லாமல் கூச்சத்தையெல்லாம் துறந்த நிர்வாணத்துடன் விசித்து விசித்து அழுதான். உடுப்பை மாட்டிக் கொள்ள ஆரம்பித்ததுமே கூச்சம் தொத்திக் கொள்ள அவன் தன்னைச் சமாளித்துக்கொண்டு வெளியில் வந்தான்.

தாரா காப்பி கலந்து வந்து கொடுத்தாள். அவன் அதை மௌனமாக வாங்கிக்கொண்டான்.

திடீரென்று நினைவு வந்தவளாய்த் தலை நிமிர்ந்து சொன்னாள்:

''அம்மாவுக்குக் கொஞ்சம் உடம்பு சரியாயில்லை போலிருக்கு. லேடி டாக்டர் கிட்ட அழைச்சுண்டு போகணுமாம். யாராவது நல்ல கைனகாலஜிஸ்ட் கிட்ட கூட்டிண்டு போறியா?''

''போறேனே!'' என்றான் அவன் சரளமாக. ''இன்னிக்கே போறேன்!''

''தாங்க்யூ!''

அவன் சட்டென்று அவளை நிமிர்ந்து பார்த்தான்.

''எதுக்கு தாங்க்யூ? நான் என்ன வேத்து மனுஷியா? உன்னுடைய பந்துக்கள் எனக்கும் பந்துக்கள் கார்த்திக்!''

அவன் பதில் ஏதும் சொல்லாமல் காப்பியைக் குடித்தான்.

'என்னுடைய குழந்தை உனக்கும் குழந்தை' என்று சொல்லாமல் சொல்கிறாள் என்று தோன்றிற்று.

அவன் மௌனமாக ஒரு சின்ன சூட்கேஸில் சொற்பமான எளிய ஆடைகளை எடுத்து வைத்துக் கொண்டான்.

''வெளியூர் போகப் போறியா என்ன?'' என்றாள் அவள் லேசான திகைப்புடன்.

''ஆமாம்.''

''எத்தனை நாளைக்கு? எந்த ஊருக்கு?''

முன்னறிவிப்பில்லாமல் கோபம பொத்துக் கொண்டு வந்தது.

''உனக்கு நான் எல்லாத்தையும் சொல்லி ஆகணுமா? நீ எங்கிட்ட அப்படிச் சொல்றியா?'' அவள் முகத்தில் தெரிந்த அதிர்ச்சி அவனுள் ஒரு குரூரத் திருப்தியை ஏற்படுத்தியது.

''உங்கிட்டேருந்து நான் எதையும் மறைக்கல்லே கார்த்திக்!'' என்றாள் அவள் மெள்ள.

மறுபடி அவன் குரல் உயர்ந்தது.

''ஓ, ப்ளீஸ் லீவ் மீ அலோன்!''

அவள் அவனைப் பார்த்த பார்வையில் கோபம் பளிச்சிட்டது. விருக்கென்று அறையை விட்டுப் போன அவசரத்தில் அன்று ஆட்டம் போட்ட பெண் குரங்கின் ஆவேச நொடிப்புத் தெரிந்தது.

அவன் பெட்டியை மூடி, டாக்ஸிக்கு ஃபோன் பண்ணினான். டாக்ஸி வந்ததும் தாராவிடம் சொன்னான்.

''எனக்குக் கொஞ்சம் ரெஸ்ட் வேணும். கிராமத்துக்குப் போறேன். ஆபீஸ்லேந்து யாராவது ஃபோன் பண்ணினா நான் அவசர வேலையாக் கிளம்பிப் போனேன்னு சொல்லு.''

அவள் பதிலே சொல்லவில்லை.

வாசலில் வேலைக்காரியின் இடுப்பில் குழந்தை இருந்தான். அவனைப் பார்த்துக் குதித்து ஆர்ப்பரித்தான். வேலைக்காரி தவறாக நினைத்திடுவாளோ என்கிற எண்ணத்தில் அவன் குழந்தைக்கு 'டாட்டா' சொல்லிக் கிளம்பினான்.

சென்னை போய்ச் சேர்ந்து அன்றிரவு ரயிலைப் பிடித்துக் கும்பகோணம் போய், அங்கிருந்து தேப்பெருமாள்நல்லூர் போய்ச் சேரும்பொழுது விடிய ஆரம்பித்திருந்தது.

எல்லார் வீட்டு வாசலிலும் சடசடவென்று நீர் தெளிக்கப்பட்டு மிருதுவான தண்ணென்ற மண் விரிப்பில் பளிச் பளிச்சென்று வெண் புள்ளிகளும் கோடுகளும் விரிய ஆரம்பித்திருந்தன. பெண்கள் குனிந்து கோலம் போடுகையில் பின்னங்காலும் கரிய பின்னல்களும் தெரிந்தன. திறந்த வாசல்கள் வழியாக டிரான்சிஸ்டர்களின் ஓசை — அம்மணக்குழந்தைகளின் அழுகுரல். தொடர்ந்து உள்ளிருந்து. ''மூதேவி! காலங்கார்த்தாலே எழுந்ததும் சுப்ரபாதம் ஆரம்பிச்சாறதா?'' என்ற குரல்கள்.

கார்த்திக் தனக்குள் புன்னகைத்தபடி அக்கிரகாரத்தில் நடந்தான்.

டில்லியிலிருந்து எத்தனை வித்தியாசமான, பாதுகாப்பான இடம் இது!

ராமமூர்த்தியின் வீட்டெதிரில் அவர் மகள் லட்சுமி பரபரவென்று கோலம் போட்டுக் கொண்டிருந்தாள். முன்னைக் கிப்போது தடித்திருந்தாள். மதர்த்த மார்பகங்கள் திமிறிக் கொண்டு தெரிந்தன. அவனுக்குச் சட்டென்று தோப்பும் அகன்ற கடந்த சல்லாபங்களும் அத்தையின் திருப்புகழும் நினைவுக்கு வந்தன.

லட்சுமி தலைநிமிர்ந்தபோது அவன் 'நாத பிந்துகலாதி'யில் இருந்தான்.

அவளுடைய புருவங்கள் வியப்பில் உயர்ந்து கண்கள் மலர்ந்தன.




''அடேடே, வாங்கோ! என்ன இப்படித் திடீர்னு? அத்தை வரல்லே?''

''இல்லே, நான் மட்டும்தான் வந்திருக்கேன். சாவி வேணும். உங்காத்திலே சாவி இருக்கிறதா அத்தை சொன்னாள்.''

''ஆமாமாம்! உள்ளே வாங்கோ!''

சின்னப் பெண்ணின் துள்ளலுடன் அவள் உள்ளே செல்ல அவன் கூச்சத்துடன் திண்ணையில் அமர்ந்து கொண்டான்.

சில விநாடிகளில் ராமமூர்த்தி வெளியே வந்தார்.

''வாப்பா, என்ன இது திடீர் விசிட்? சாதாரணமா விசாலம் ஒரு கடிதாக போடுவளே?''

''நானே திடீர்னு நினைச்சுண்டு கிளம்பினேன். கொஞ்ச நாள் இங்கே விச்ராந்தியா இருக்கலாம்னு தோணித்து.''

''ஆகா, பேஷா! எங்களுக்கெல்லாம்தான் இங்கே அலுத்துப் போச்சு. உங்களுக்கு ஒரு மாறுதலா இருக்கும்!''

அவர் மேற்கொண்டு அவனைப் பற்றின விவரங்கள் கேட்டுக் கொண்டிருக்கையில் லட்சுமி காப்பி கலந்து கொண்டு வந்தாள்.

''ஸ்நானம் பண்ணிட்டுக் கொஞ்சம் ரெஸ்ட் எடுத்துக்கோ. பத்தரை மணிக்குச் சாப்பிடலாம். சாப்பாடெல்லாம் நம்மாத்திலேதான், நீ இங்கே இருக்கிற வரைக்கும்!''

அவன் சாவியை வாங்கிக் கொண்டு எழுந்தான்.

''எதுக்கு சார் உங்களுக்குச் சிரமம்? நான் ஏதோ மானேஜ் பண்ணிக்கிறேன்.''

''நன்னாயிருக்கு, ஒரு சிரமமுமில்லே. விசாலத்துக்கும் எனக்கும் இன்னி நேத்துப் பழக்கமா?''

அவன் சங்கோஜத்துடன் 'தாங்க்ஸ்' என்று முணு முணுத்துவிட்டுத் தெருவைக் குறுக்கே கடந்து எதிர்த்த வீட்டைத் திறந்தான்.

வீடு துப்புரவாகவே இருந்தது, சமீபத்தில் பெருக்கி மெழுகின மாதிரி.

திறந்த நடு முற்றத்தில் பளீரென்று சூரிய ஒளி பாய்ந்து வீடு முழுவதும் ஒளியேற்றிற்று. முற்றத்தையும் கிணற்றடியையும் பார்க்கும்போது அத்தையின் ஞாபகம் வந்தது. கிராமச் சூழலில் அத்தையின் ஆன்மீக பலம் அதிகமாக ஜொலித்த நினைவு சிந்தையில் நின்றது. அலை பாயும் மதர்த்துப் போன மனசுகளை வார்த்தையாலேயே எட்ட நிறுத்தும் பலம். யௌவனத்திலே இந்திரியங்களை அடக்கிப் பழகிக் கொண்ட தபஸ்வி. சுந்தரமூர்த்தியைப் போல் எத்தனை பேர்களைச் சமாளித்திருப்பாள் இந்தப் போக்கிடமற்ற கிராமத்தில்! தாரா சொல்லும் பௌதிக வித்தியாசம் அத்தைக்கு மட்டும் ஏன் பலவீனத்தை ஏற்படுத்தவில்லை?

''அஞ்சு நிமிஷத்திலே கொண்டு விடறேன்னு சொன்ன வேலபோனவை ஏதோ ஒரு அசட்டுத்தனத்திலே நம்பினேன்!''

தன் மானத்தைக் காத்துக்கொள்ளும் தீவிரம் இருந்திருந்தால் நம்பியிருப்பாளா?

அவன் சட்டென்று சுய நினைவுக்கு வந்தான். முற்றத்து ஓரத்தில் தாம்புக் கயிறும் குடமும் இருந்தன.கயிற்றைச் சுருக்கிட்டுக் கிணற்றடிக்குச் சென்று நீரை இழுத்துத் தலையில் விட்டுக் கொள்கையில் நீர் தண்ணென்று சூடாகிப் போன மண்டையில் விழுந்தது.

உள்ளே புகுந்துகொள்ளப் பார்த்த நினைவுகளை விரட்டுகிற முயற்சியில் பெரிய குரலில் 'நாத பிந்துகலாதி நமோ நம!'' என்று ஆரம்பித்து' ஆதியந்தவு லாவாக 'விற்குவரும் சமயத்தில் இன்னொரு குரலும் அவனுடன் இணைந்து பாடுவதை உணர்ந்து திடுக்கிட்டு அவன் அவசரமாக உடம்பைத் துடைக்க ஆரம்பித்தான்.

''நாதான் நாச்சாமி!'' என்று முன் கூடத்திலிருந்து குரல் கேட்டது.



''இது என்ன...எலெக்ட்ரிக் இன்ஜின் பொருத்தி யிருக்கு... ஆனால் புகை குப் குப்புனு வருதே!''

''அதுடிரைவரோடசுருட்டுப் புகை!''

—என்.எஸ்.வி. குருமூர்த்தி

''இதோ வரேன்'' என்று ஈரத் துண்டைக் களைந்து வேஷ்டி அணிந்து சென்றபோது நாச்சாமி வெற்றிலைச் சிவப்பேறிய சிரிப்பைச் சிரித்தான்.

எத்தனை சீக்கிரம் செய்தி பரவி விடுகிறது இங்கு என்கிற திகைப்புடன் கார்த்திக் ''வா, நாச்சாமி, எப்படி இருக்கே?'' என்றான்.

நாச்சாமி மாறியிருந்தான். கன்னச் சதை மடிப்பு மடிப்பாய்த் தெரிந்தது. சிவந்த முகத்தில்' கண்களுக்கடியில் ஒரு கரிய நிழல் ஒடிற்று. வஜ்ரம் போன்ற உடம்பும் அட்டகாசப் பார்வையுமாக இருந்தவனா இப்படி ஆகிவிட்டான் என்று ஆச்சரிய மேற்பட்டது.

''நன்னாத்தான் இருக்கேன். பாரேன். இந்த ஊர்ல இருக்கிறவா வாழ்க்கையில என்ன மாறுதல் ஏற்படும்? வேணுக் கல்யாணம் ஆகும், குழந்தைகள் பிறக்கும்!''

கார்த்திக் சிரித்தான்.

''ஆகியிருக்கா?''

''ஆமா, இரண்டு குழந்தைகள்! மூணாவதுக்குப் பிறந்தாம் போயிருக்கா!''

''சபாஷ்! நல்ல சுறுசுறுப்புத்தான்!''

''அதிலே மட்டும்தான்!'' என்று நாச்சாமி சிரித்த சிரிப்பில் அலுப்புத் தெரிந்தது.

'உன் விஷயம் எப்படி?' என்ற நாச்சாமி கேள்விக்கு மிகைப்படுத்தாமல் சுருக்கமாகச் சொல்லி ஒரு வழியாக அவன் கிளம்பிச் சென்றதும் கார்த்திக் களைப்புடன் முற்றத்தை ஒட்டிய தாழ்வாரத்தில் பாயை விரித்துப் படுத்தான்.இன்று மூன்று மணிக்கே விழித்துக் கொண்டது கண்ணைத் தூக்கம் சுழற்றிக் கொண்டு வந்தது.

இன்னும் கொஞ்ச நாளைக்கு எதைப் பற்றிய ஆராய்ச்சியும்,யாரைப்பற்றிய நினைப்பும் இல்லாமல், மனசை எதிலும் ஒட்டாமல் மிதக்க வைக்க வேண்டும் என்கிற வைராக்கியத்துடன் கண்களை மூடிக் கொண்டான்.

மூடிய சில விநாடிகளில் மனசு மிதக்க ஆரம்பித்தது. கீழே விருந்து கிளம்பும் ஒலங்களையும் ஒலிகளையும் லட்சியம் செய்யாமல் பறந்தது.

'உங்கிட்டயிருந்து நான் எதையும்ம றைக்கல்லே கார்த்திக்' என்றாள் தாரா. ரேடியோ சங்கீதத்துக்குக் குழந்தை தாளம் போட்டது. 'தாராவுக்கு என்ன பிடிக்கும் சொல்லுங்கள்' என்று கோமதி கேட்டாள்.

அவன் எதையும் காதில் வாங்கிக் கொள்ளாமல் மிதந்தான். ஒரு செலுலாய்ட் பொம்மைக் குழந்தை அவன் காலைப் பிடித்தது. சிரித்து மனத்தை ஈர்த்தது.

'வெள்ளைக்காரக் குழந்தயாட்டம்இருக்கு' குருக்களாத்துக் குழந்தை மாதிரி இல்லே!. யாரோ பலமாக மண்டையைப் பிளந்தார்கள்.

அவன் அலறி அடித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். வியர்வை ஆறாய் வழிய, அவன் தன்னைச் சமாளித்துக் கொண்டு நிமிர்ந்தபோது லட்சுமி நிலைப்படியில் நிற்பது நிழலுருவமாய்த் தெரிந்தது.

''சாப்பிட வரேளா?'' என்று அவள் சன்னமாகக் கேட்டாள். (தொடரும்)



ஒவ்வொரு நாளையும்

# டான்டெக்ஸ்®

அணிந்து துவக்குங்கள்

காலை முதல் இரவு வரை டான்டெக்ஸ்
அணிந்து மகிழுங்கள். அதன்
கச்சிதமான உடம்போடு ஒட்டும்
அமைப்பும், சிறப்பும் உங்களுக்கு நாள்
முழுவதும் இதமான சுகத்தை
அளிக்கிறது.

IS : 4964



ஒட்டி உறவாட
**டான்டெக்ஸ்**

ப்ரீஃப்ஸ் • வெஸ்ட்ஸ் • காஷிவெல்ஸ்
ஸ்போர்ட்ஸ் பனியன்கள் • சிறுவர்களுக்கான ரகங்கள்




ttk தயாரிப்பு

Imageads-M- TT. 1568 Tam

# ரோஜா

ஜிஷ்ணுதா

திலீப்

இந்தப் பரந்த உலகத்து மகாஜனங்களுக்கு என்னவாயிற்று? திடீரென்று புத்திசாலி ஆகிவிட்டார்களா? பின்னே என்ன சார்! நானும் மூன்று தினங்களாக மெயின் கார்டு கேட், ஜங்ஷன், காஜாநகர், பொன்மலைன்னு தேட்டை போட்டுப் பார்த்துட்டேன். பைசா பெயரவில்லை. அப்படியும் 'பிக் ஃபவர்ஸ்'ல பஸ் ஏறிப் பார்த்தேன். இரண்டு பர்ஸ் கிடைத்தது. ஒன்று நாற்பது இருபது பைசா என்றது. இன்னொன்று மௌனம் சாதித்தது.

'திலீப் சார், உங்க கணக்கு இருநூறு ரூபாய்க்கு மேலே தாண்டிடிச்சி. இதை கிளியர் பண்ணுத்தான் மேலே சாப்பாடு!' -மலையாள நாயரின் அன்பான வார்த்தைகள் என்னை வளையமிட்டன.

'ஏதாவது பெரிசா அடிச்சிட்டு, இந்தக் கந்தக திருச்சியை விட்டு பெங்களூர், பம்பாய்ன்னு பறந்திடலாமா?' 'அதுதானே, நான் ஏன் அப்படிச் செய்யக் கூடாது?' யோசித்தேன். செயலில் இறங்கினேன்.

மெயின் கார்ட் கேட்டின் எதிர்த் திசையில் பிரிந்து, ஜோசப் கல்லூரி காம்பவுண்ட் சுவரோடு வழிந்து, ஜங்ஷன் மேம்பாலத்தில் ஏறி இறங்கினால் தில்லைநகர் உங்களைக் கைதட்டி வரவேற்கும். மூன்றாவது கிராஸின் இடதுபக்கம் திரும்பினேன். அதன் முனையில் இளம்பச்சை நிறத்தில் புதிதாகப் பிரசவமாகி இருந்தது ஒரு பங்களா. பூட்டியிருந்தது. நின்றேன்.



பதினொரு மணிக்கு வந்தேன். பங்களா? டிட்டோ.

நான் கறுகறுப்பாகிச் சுவர் தாவினேன். வலது பக்கத்தில் தொங்கிக் கொண்டிருந்த குழாயில் ஏறித் தாழ்வாரத்தில் நடந்து கீழ்த் தளத்துக்குச் செல்லும் கதவை நெருங்கினேன். சிறிது எதிர்ப்புக்குப் பிறகு பூட்டு வழி விட்டது.

வேட்டையாடிவிட்டு வெளியே ப்ரீஃப் கேஸுடன் வந்தேன். கார் ஷெட் என்னைக் கூப்பிட்டது. இடுக்கில் கண்ணை நுழைத்தேன். உள்ளே அம்பாஸிடர் வெள்ளையாக நின்றிருந்தது.

கார் ஷெட்டைத் திறந்தேன். காரைத் திறந்தேன். பெட்ரோல் நிரப்பியாக இருந்தது. சேலம் சாலையில் பாய்ந்தேன்.

முசிறி

அந்த அகால நேரத்தில், இளையராஜா ஆசீர்வாதத்துடன் ஜானகி பாட அந்தத் தட்டி விலாசில் மக்கள் கும்பலாக முட்டை தோசை சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.



காரை நிறுத்தினேன். கடைக் காரப் பையன் ஓடி வந்தான்.

"என்ன சார் வேணும்?"

"ஃபுல் டீ!"

விஷ்! திருச்சிக்காரர் காரைக் காணாமல் போலீசுக்குத் தகவல் கொடுப்பார். உடனே என் திசையிலும் செய்தி பரவும். வெள்ளை அம்பாஸிடரைத் தேடுவார்கள். அப்புறம் போலீஸ் என்னை விசாரிக்கும். வெள்ளையாக இருந்தால்தானே பிரச்னை? நிறத்தை மாற்றி விட்டால் என்ன? வெரி குட் திலீப்!

சேலம்

தாதுபாய் குட்டையில் குட்டைகள் காணாமல்போய், ஹைட்ரோ கார்பன் வண்டிகளுக்கு வைத்தியம் பண்ணும் இடமாக மாறியிருந்தது.

மேற்கு மூலையின் ஒதுக்குப்புறமாக என் நண்பன் கௌதமன் ஸ்ப்ரே பெயிண்டிங் கடை வைத்திருந்தான். விஷயத்தைச் சொன்னேன்.

அடுத்த சில மணி நேரத்தில் நான் கொண்டுவந்த கார் புதுப் பெண்ணாகக் கரும் பச்சையில் ஜொலித்தது.

நம்பர் பிளேட்டையும் கவனமாக மாற்றி இருந்தான்.

'ரொம்ப தாங்க்ஸ்' ப்ளஸ் இரண்டாயிரத்தையும் அவனிடம் வெட்டினேன்.

கர்நாடக எல்லைக்குள் நுழைந்துவிட்டால் எந்த சைத்தானும் நம்மைத் தொட முடியாது. விடிவதற்குள் கிருஷ்ணகிரி வழியாகப் போய்விட வேண்டும். ஆக்ஸிலேட்டரை அழுத்தினேன்.

தர்மபுரி

காவேரி ரப்பர் ஃபாக்டரியின் இரண்டாவது ஷிப்டுக்காகச் சிலர் கும்பலாகப் போய்க் கொண்டிருந்தார்கள். என் மனம் அசை போட்டது. திருச்சியில் அடித்தது தங்கமாக ஐம்பது சவரன் இருக்கும். பணம்? ஐந்து லட்சம் இருக்குமா? இருக்கலாம். இனிமேல் இந்தத் தொழிலை விட்டு விட்டு நாணயமாக நாணயம் சம்பாதிக்கணும்.

அவசரமாக ஒரு வளைவு. ஸ்டைலாக ஸ்டீயரிங்கை ஒடித்தேன். எதிரே பரந்து விரிந்த வட்ட வெளிச்சத்தில் ஓர் இளம் பெண்!

நீரஜா

கதவு திறக்கப்படும் சப்தம் பின்னால் கேட்டது. பதினொராம் பக்க 'சீஸரக்ஷ'வி லிருந்து வெளியே வந்து திரும்பிப் பார்த்தேன். அம்மா!

அருகில் வந்தாள். "குட்டி, உன் அப்பா குணம்தான் தெரியுமே? அவருக்கு நீ ஒரே

பெண்ணுன்னு கூடப் பார்க்க மாட்டார். வெட்டிப் போட்டிடுவார். பேசாம அந்தப் பையனை மறந்திட்டு, உன் அத்தை பையனையே கல்யாணம் செய்துக்க.''

''அது இந்த ஜென்மத்திலே நடக்காதும்மா. திருமணம் செய்துக்கிட்டா நவீனைத்தான் செய்துக்குவேன். இல்லைன்னு எனக்குத் திருமணமே வேண்டாம்.''

''இப்படிச் சொல்லிட்டா எப்படியம்மா? நாளைக்கு வேற உன் அத்தை வீட்டிலிருந்து உன்னைப் பெண் பார்க்க வர்றாங்க...''

''நாளைக்கா?''

''ஆமாம்மா. நாளைக்குத்தான்.''

நடுக் கூடத்து சுவர்க் கடியாரம் இரண்டு என்றது.

மெல்ல எழுந்தேன். சூட்கேஸில் துணிகளை எடுத்துத் திணித்தேன். பீரோவைத் திறந்து தாராளமாக நகைகளையும் பணத்தையும் அள்ளிப் போட்டுக் கொண்டேன். பின் பக்கக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தேன்.

கிளைச்சாலை மெயின் ரோடுடன் சந்திக்கும் இடத்திலிருந்து சற்று விலகி நின்றேன். ஒரு கார் அம்பாக வந்து என்னருகே நின்றது.

**திலீப்**

அந்த அமானுஷ்யமான நேரத்தில் வானத்துத் தேவதையாக ஒரு பெண் காரை நிறுத்தியது என்னுள் சில ச. மீட்டருக்கு அதிர்ச்சியையும் ஆச்சரியத்தையும் உண்டாக்கியது.

யார் இவள்?

அவளைப் பற்றி அசை போடுவதற்குள், ''எக்ஸ்க்யூஸ் மீ! நான் ஒரு ஆபத்திலே மாட்டிக்கிட்டு இருக்கேன். ப்ளீஸ், என்னைக் காப்பாத்துங்க'' என்றாள்.

அவள் தன் கதையைப் பாட்டுப் புத்தகச் சுருக்கமாகச் சொல்ல, நான் அவளை மேய்ந்தேன். நல்ல சிவப்பு. அகலமான கண்கள். ராதாவை நினைவூட்டும் கன்னம். டியாரா தொட்ட கூந்தல். ரேகா மூக்கு. டிசைம் ஒபேலின் க்ரீனில் ஸாரி. இருட்டு நிறத்தில் ப்ளவுஸ். மடியில் பிடிவாதமாக அந்த மினி சூட்கேஸ்.

''அப்ப நீங்க வீட்டை விட்டு வந்தது யாருக்கும் தெரியாது?'' — நான்.

''தெரியாது. அவங்க என்னைத் தேடறதுக்குள்ள நான் என் காதலர் கிட்டே போய்ச் சேர்ந்திடணும்.''

''அவர் எங்கே இருக்கார்?''

''ஒசூர்.''

''நான் பெங்களூர்தான் போய்க்கிட்டு இருக்கேன்.'' என்றேன்.

அவள்: ''அப்படியா? ரொம்ப நல்லதாப் போச்சு. அப்ப நான் ஒசூர்ல இறங்கிக்கிறேன்.''

''ஓ. கே.''

திடீரென்று என்னுள்ளே எபிநெப்ரின் சடுதியில் சுரக்க, நான் கம்பி மேல் நடப்பவனைப் போல எச்சரிக்கையானேன். வீட்டை விட்டு ஓடும் ஒரு பெண் வெறும் கையுடனு புறப்படுவாள்?

நான் காரை ஓரமாக நிறுத்தினேன்.

அவள் பதற்றத்துடன் ''ஏன் காரை நிறுத்திட்டீங்க?'' என்று கேட்டாள்.

''காரணத்தோடுதான். இந்தப் பக்கம் கொஞ்சம் திருடர்கள் நடமாட்டம் உண்டு.'' பதுக்கி வைத்திருந்த பதினைந்து கட்டிலிருந்து இரண்டு நோட்டுக் கட்டை மட்டும் எடுத்து அவளிடம் நீட்டினேன்.

''என்ன இது?''

''இது என் பணம். முன் ஜாக்கிரதையா எதுக்கும் உங்க சூட் கேஸ்ல வச்சுக்கங்க. ஒசூர் வந்ததும் வாங்கிக்கிறேன். சூட்கேஸைச் சீட்டுக்கு அடியிலே மறைச்சு வச்சிடுங்க. அதுதான் நல்லது'' என்றேன்.

என்னை ஒரு முறை பார்த்தாள். நான் நேராகப் பார்ப்பது போல் அரைக் கண்ணில் வெட்டினேன். சூட்கேஸைத் திறந்தாள்.

வாவ்!

பெரிய இடத்துப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும். பணமும் நகையுமாக வழிந்தது பெட்டி. என் பணத்தை வைத்து மூடி, சூட்கேஸைச் சீட்டுக்கு அடியில் தள்ளினாள்.

நான் கன்கார்டாகப் புறப்பட்டேன்.

கை ஸ்டீயரிங்கை ஒடித்தாலும் கண் சாலையில் பதிந்திருந்தாலும் மனமென்னவோ பிடிவாதமாக அவள் சூட்கேஸையே சுற்றிச் சுற்றி வட்டமிட்டது. பிறிதொரு முறை அதிர்ஷ்ட தேவதை என்னை அழைப்பதுபோல இருந்தது. இதையும் அமுக்கி விட்டால் ஆயுசுக்கும் சொந்தத் தொழிலை விட்டு விடலாம். இவளை எங்கேயாவது, எப்படியாவது வெட்டிவிட வேண்டும்.

மஞ்சள் கறுப்பில் கிருஷ்ணகிரி எங்களை அன்புடன் வரவேற்றது. வலப்பக்கம் திரும்பினால் ஊர். இடப்பக்கம் பைபாஸில் திரும்பினேன். எதிரே வெள்ளித் தடாக நீர் ஏரி. என் மூளையில் மின்னலடித்தது.

தமிழகத்தின் தென் திருப்பதி என்றழைக்கப்படும் ஸ்ரீவில்லிபுத்தூர் திருவண்ணாமலை வேங்கடாசலபதி பெருமாள் கோவிலுக்கு ஸ்வாமி தரிசனம் செய்ய வரும் பக்தர்களுக்காக ஸ்ரீ ஆண்டாள் கோவிலிலிருந்து சனிக்கிழமை தோறும் இலவசமாக 'வேன்' சென்று வருகிறது. சுவாமி தரிசனம் முடியு மட்டும் காத்திருந்து திரும்ப அழைத்தும் வருகின்றனர். இது மாதிரி வேறு எந்தக் கோவிலிலும் கிடையாது.

—எஸ். எஸ். மணியம்



சடக்கென்று காரை ஓரம் கட்டினேன்.

''ஏரியைக் கண்டதும் நம்ம வண்டிக்குத் தாகம் எடுக்க ஆரம்பிச்சுடிச்சி போலிருக்கு. ரேடியேட்டருக்குத் தண்ணீர் ஊற்றணும்.''

''ரொம்ப நேரமாகுமா?''

''பத்து நிமிடம் கழிச்சுப் புறப்படலாம். நான் போய்த் தண்ணீர் எடுத்துக்கிட்டு வர்றேன். நீங்க வேணுமின்னு கீழே இறங்கி பாத்ரூம் ஏதாவது....''

அவன் மெல்லத் தலையாட்டினாள்.

நான் ஜல ஏரியை நோக்கி ந...ட...ந்...தே...ன். அவள் வெளியே வந்து இருளை நோக்கி நடப்பது தெரிந்தது. அவ்வளவு தான்; ஒரே பாய்ச்சலில் காரை நோக்கிப் பாய்ந்து ஸ்டீயரிங்கை அழுத்தி கியரை மாற்றிப் புயலாகப் புறப்பட்டேன் — நான் மட்டும்!

குருபரப்பள்ளி

தென் பெண்ணையாறு அநாதையாக நீரில்லாமல் ஓடிக் கொண்டிருந்தது. பாலத்தில் காரை நிறுத்தினேன். சீட்டுக்கு அடியில் பதுங்கியிருந்த அந்த சூட்கேஸை எடுத்துத் திறந்தேன். அத்தனையும் பணம்! அவ்வளவும் தங்கம்!

சூட்கேஸின் வலப்பக்கத்தில் இருந்த பையில் கையை விட்டுத் துழாவினேன். ஏதோ தட்டுப்பட்டது. எடுத்து வெளிச்சத்தில் பார்த்தேன். போட்டோ! அந்தப் பெண்ணுடைய பா. போ. சைஸ் படம்! போட்டோவில் இன்னும் அழகாக இருந்தாள். எதற்கும் இருக்கட்டும் என்று சட்டைப் பாக்கெட்டில் அதைப் பத்திரப் படுத்திக் கொண்டேன்.

சாத்மென்னை நெருப்பில் கட்டுப் புகையாக்கினேன்.

.கார் காமன்தொட்டியைத் தாண்டி இடப் பக்கத்தில் திரும்பும்போது, எதிரே நாலைந்து போலீஸ்காரர்கள் அவசரமாக உதய மானார்கள். கையை நீட்டினார்கள். எதற்கு நிறுத்தச் சொல்கிறார்கள்? காரை ஓரமாக நிறுத்தி என்ஜினைச் சாகடித்தேன்.

''என்ன விஷயம்? ஏன் காரை நிறுத்தினீங்க?'' என்று சற்று அதட்டலாகவே கேட்டேன்.

''கோவிச்சுக்காதிங்க சார். திருச்சியிலே ஒரு வீட்டிலே திருட்டு. அப்புறம் வீட்டுக்காரங்க காரையும் காணோமாம். கொஞ்ச நேரத்துக்கு முன்னதாக எங்களுக்குத் தகவல் வந்தது. இது தமிழ் நாட்டு எல்லையாச்சே! அதுதான் செக் பண்ணிக்கிட்டு இருக்கோம்.'' —ஒரு போலீஸ்காரர்.

''அதுக்கென்ன பாருங்க. ஆமாம், என்ன கார்?''

''வெள்ளை அம்பாஸிடர்.''

''நம்ம கார் பச்சை. வேணுமின்னு டார்ச் அடிச்சுப் பாருங்க.''

பார்த்தார்கள்.

''என்னப்பா செக் பண்ணிட்டீங்களா?'' தூரத்தில் பாலத்துச் சுவரின் மேல் உட்கார்ந்திருந்த இன்ஸ்பெக்டர் கான்ஸ்டேபிள்களைப் பார்த்துக் குரலெழுப்பினார்.

''ஆச்சு சார். இந்த வண்டியில்லே. இது



தமிழ் மொழியில் அதிகமாகப் பாடல் இயற்றியவர் ராமாயணத்தை இயற்றிய கம்பரா? மகாபாரதத்தை எழுதிய வில்லிபுத்தூராரா?

இருவருமே இல்லை. மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளைதான்! இவர் தமிழ் மொழியில் லட்சம் பாட்டுக்கு மேல் எழுதிய புலவர் ஆவார்!

--புலவர் கீரன் சொற்பொழிவில்
கேட்டவர்: எம். இராஜேந்திரன்

பச்சைக் கலர் வண்டி. ஆனால் புதுப் பெயிண்ட் வாசனை அடிக்குதுசார்.''

''அப்படியா?'' இன்ஸ்பெக்டர் சந்தேக நடையுடன் என்னருகே வந்தார்.

என்னுள்ளே நடுக்கம். பயத்தை வெளிக் காட்டாது, ஏதாவது சொல்லிச் சமாளிக்க வேண்டும். என்ன செய்யலாம்? ஜெட்டாக யோசித்தேன்.

இன்ஸ்பெக்டர்: ''மிஸ்டர்! இது உங்க வண்டியா?''

''யெஸ்.''

''எங்கிருந்து வர்றீங்க?''

''மெட்ராஸ்.''

''போற இடம்?''

''பெங்களூர்.''

''ஆமாம், காருக்குப் புதுசாப் பெயிண்ட் அடிச்சிருக்கீங்க?'' — இன்ஸ்.

என் நினைவில் அந்தப் பெண் வந்தாள். யோசனை சொன்னான். ''என்னோட ஒரே தங்கைக்கு நாளைக்குக் கல்யாணம். பெங்களூர்தான் மாப்பிள்ளை வீடு. மாப்பிள்ளைக்கு சீர் வரிசையா கார் கொடுக்கிறதாப் பேச்சு. பளிச்சுன்னு கொடுக்கலாம்னு பெயிண்ட் அடிச்சேன்.''

''தங்கச்சிக்குக் கல்யாணமா?''

''ஆமாம் சார். இதுதான் என் தங்கை நிர்மலா. இவளுக்குத்தான் நாளைக்குக் கல்யாணம்!''சட்டைப் பாக்கெட்டில் இருந்த அந்தப் போட்டோவை எடுத்து இன்ஸ்பெக்டரிடம் நீட்டினேன்.

இன்ஸ்பெக்டர் உக்கிரமாக என்னைப் பார்த்தார். ''இந்தப் பெண்ணோட பேர் நிர்மலா இல்லை, நீரஜா!''

நான் சிரித்தேன். ''என் தங்கை பேர் எனக்குத் தெரியாதா? அவளோட பேர் நிர்மலா. நான் அவளோட அண்ணன்!''

''இவங்க பேர் நீரஜா! இந்தப் பெண்ணுக்கு அண்ணனே கிடையாது!''

''எப்படிச் சொல்றீங்க?''

''நான் இவளோட காதலன் நவீன்!''

# கொஞ்சம் தங்கம், கொஞ்சம் பித்தளை

விஜயாலயன்

**க**ணவனிடம் அந்த வார்த்தைகளைத் தயங்கியபடியே சொன்னாள் லட்சுமி.

''எனக்கு ரொம்பப் பயமா இருக்குங்க!''

திருமண அழைப்பிதழ்களில் விலாசம் எழுதிக்கொண்டிருந்த சின்னச்சாமி நிமிர்ந்தார். மனைவியின் முகத்தைப் பார்த்தார். லட்சுமி உண்மையில் ரொம்பப் பயந்து போயிருந்தாள்.

''எனக்கென்னவோ ரொம்பப் பயமா இருக்குங்க. கல்யாணத்துக்கு இன்னும் ஒரு வாரந்தான் இருக்கு. கொஞ்சம் வசதியான இடம். பையன் ரெவின்யூ இன்ஸ்பெக்டரா இருக்கான். கை நிறையச் சம்பளம் வாங்கறான்னு ஆசைப்பட்டு ஜெயாவுக்கு நாற்பது பவுன் போடறதா ஒத்துக்கிட்டீங்க. இப்ப முப்பது பவுன்தான் போட முடிஞ்சுது. இன்னும் பத்துப் பவுனுக்கு என்னங்க பண்றது? நம்ம தகுதிக்கு மீறிய இடம்னு சொன்னேனே, கேட்டீங்களா? கல்யாணச் செலவுக்கே இன்னும் அஞ்சாயிரமோ பத்தாயிரமோ ஆகுமே?''

கொஞ்ச நேரத்துக்கு முன் அவரிடமிருந்த உற்சாகமும் சந்தோஷமும் ஓடிப் போய்விட்டன. வேதனையோடு சொன்னார்:

''லட்சுமி! ஜெயா நமக்கு ஒரே பொண்ணு. நான் அவளை எவ்வளவு செல்லமா வளர்த்தேன்னு உனக்குத் தெரியும். அவளுக்கு ஒரு நல்ல வாழ்க்கை அமையணும்னுதான் நாற்பது பவுனுக்கு ஒத்துக்கிட்டேன். பையன் ஒழுக்கமான பையன். எந்தக் கெட்ட பழக்கமும் கிடையாது. சினிமா கூடப் பார்க்க மாட்டானாம். இப்படிப்பட்ட நல்ல பையன் இந்தக் காலத்திலே கிடைக்கிறது ரொம்பக் கஷ்டம். கண்ணுக்கும் லட்சணமா இருக்கான். அதனாலேதான் நாற்பது பவுன் போடறதுக்கு ஒத்துக்கிட்டேன். எப்படியோ முப்பது பவுன் போட்டுட்டேன். கல்யாணச் செலவுக்கு ஏழாயிரம் ரூபாயும் புரட்டிட்டேன். ஆனா இன்னும் பத்துப் பவுன்... லட்சுமி! நான் ஒண்ணு சொல்றேன், அமைதியாக் கேப்பியா?''

''சொல்லுங்க.''

''செய்து வச்சிருக்கிற முப்பது பவுன் நகையோட பத்துப் பவுனுக்குப் பித்தளை நகையை வாங்கிச் சேர்த்துப் போட்டுரு





வோம். கல்யாணமான மூணு மாசத்துக்குள்ள எப்படியோ அந்தப் பத்துப் பவுனை ஜெயாவுக்குப் போட்டுருவோம்...''

லட்சுமி அதிர்ந்து போனாள்.

''என்ன... என்ன சொல்றீங்க நீங்க...?''

''பயப்படாதே லட்சுமி. மூணு மாசம் கழிச்சு அந்தப் பத்துப் பவுனைப் போட்டுருவோம்...''

''வேண்டாங்க. இந்த விஷயம் மாப்பிள்ளை வீட்டுக்காரங்களுக்குத் தெரிஞ்சா நம்ம மானம் மரியாதை என்னங்க ஆகும்?''

சின்னச்சாமி மனைவியின் இரண்டு கைகளையும் ஆதரவாகப் பிடித்துக் கொண்டார்.

''இத பார் லட்சுமி... இந்த விஷயம் என்னையும் உன்னையும் தவிர வேற யாருக்குத் தெரியும்? கல்யாணம் முடிஞ்ச மூணு மாசத்திலே திருப்பிப் போட்டுடுவேனே!''

''எனக்கென்னவோ பயமா இருக்குங்க... ஜெயா இதுக்குச் சம்மதிப்பாளா?''

''லட்சுமி! இந்தக் கல்யாணம் நடக்காமப் போனா என் மானம் மரியாதை எல்லாமே போயிடும். என் மானம், மரியாதையைக் காப்பாத்தறது உன் கையிலதான் இருக்கு. நீதான் ஜெயாவை எப்படியாவது சம்மதிக்க வைக்கணும்...''

கணவரைப் பார்க்கப் பரிதாபமாக இருந்தது. மனசே இல்லாமல் தலையாட்டினாள்

கல்யாணம் முடிந்த மூன்றாவது நாள்.

அம்மா அப்பா காலில் விழுந்து ஆசீர்வாதம் வாங்கிக் கொண்டு கணவன் வீடு புறப்படத் தயாரானாள் ஜெயா. பயத்துடன் அம்மாவைப் பார்த்தாள். லட்சுமி மகளின் தலையை ஆதரவாகத் தடவிக் கொடுத்தாள்.

''ஜெயா, உங்கப்பா தலையை அடகு வெச்சாவது மூணு மாசத்துக்குள்ளே அந்தப் பத்துப் பவுன் நகையைப் போட்டுருவாரு. பயப்படாமப் போம்மா....''

''அம்மா! நான் ஒவ்வொரு நிமிஷமும் பயந்து பயந்துதாம்மா வாழ்ந்துக்கிட்டு இருப்பேன். அப்பா எப்போ அந்தப் பத்துப் பவுன் நகையை என் கழுத்தில போடறாரோ அப்பத்தான் எனக்கு நிம்மதி. சந்தோஷமான வாழ்க்கை. நான் வரேம்மா...''

ஜெயா சூட்கேஸைக் கையில் எடுத்துக் கொண்டாள். கணவன் திருமூர்த்தியுடன் வெளியில் நின்றிருந்த டாக்ஸியில் ஏறிக் கொண்டாள். டாக்ஸி புறப்பட்டது.

ஜெயா புகுந்த வீடு வந்த இரண்டாவது மாதம். அன்று மாலை ஆபீஸிலிருந்து வேக வேகமாக வந்தான் திருமூர்த்தி. கையில் இருந்த மல்லிகைப் பூவை ஜெயாவிடம் நீட்டினான்.

''ஜெயா! ஒரு சந்தோஷமான விஷயம்...''

''சொல்லுங்க.''

''என்னோட ஃப்ரண்ட் லோக்ராஜ் இல்லே? அவன் ஒரு ஃபேக்டரி ஆரம்பிக்கப் போறானும். அட்டைப் பெட்டித் தொழிற்சாலை. அதுக்கு ரெண்டு லட்சம் ரூபாய் செலவாகுமாம். என்னையும் ஒரு பார்ட்னராச்

சேர்த்திருக்கான். உன் பேர்லதான் பார்ட்னராகப் போறேன் முதல்லே ஐம்பதாயிரம் போடணுமாம். பேங்கிலே என் பேரிலே பத்தாயிரம் இருக்கு. மீதி நாற்பதாயிரம்..''

''மீதி நாற்பதாயிரத்துக்கு என்ன பண்ணுவீங்க?''

''உன் நாற்பது பவுன் நகையை வித்திடலாம். பின்னால புதுசாச் செய்துக்கலாம். நாளைக்கு ஆபீஸ் போறப்ப எல்லா நகைகளையும் எடுத்துக் கொடு...''

ஜெயா பொடிப் பொடியாகச் சிதறினாள். முகம், உடலெல்லாம் பயத்தால் வேர்த்தது.

''ஜெயா! ஜெயா! என்னாச்சு உனக்கு? ஏன் ஒரு மாதிரியாயிட்டே?''

''ஒண்ணும்... ஒண்ணுமில்லேங்க. மத்தியானத்திலேருந்து ரொம்ப தலைவலி. அதான்....''

திருமூர்த்தி பதறினான். ''டாக்டர் கிட்டே போகலாம். புறப்படு ஜெயா.''

''வேண்டாங்க. கொஞ்ச நேரம் ரெஸ்ட் எடுத்துக்கிட்டாச் சரியாப் போயிடும்.''

ஜெயா படுக்கைக்கு ஓடினாள். குப்புற விழுந்தாள். மனசு தவியாய்த் தவித்தது. அழுகை அழுகையாய் வந்தது.

முப்பது பவுன்தான் தங்கம். பத்து பவுன் பித்தளை என்று அவரிடம் எப்படிச் சொல்வது? இந்த உண்மை அவருக்குத் தெரிந்தால்? மாமாவும் அத்தையும் கேள்விப்பட்டால்?

மெல்லவும் முடியாமல் விழுங்கவும் முடியாமல் தவியாய்த் தவித்தாள் ஜெயா. அழுகை குமுறிக் கொண்டு வந்தது.

கையில் சூட்கேஸுடன் வாசலில் நின்றாள் ஜெயா.

சின்னச்சாமியும் லட்சுமியும் பதறிப் போனார்கள்.

''என்னம்மா.... திடீர்னு....? ஒரு லெட்டர் கூடப் போடாம?'' என்று கேட்டார் சின்னச்சாமி.

''உடம்புக்கு ஏதாவது முடியலையாம்மா?'' பரிவோடு கேட்டாள் லட்சுமி.

''இல்லேம்மா....''

''பின்னே அவருக்கு ஏதாவது?''

''அவர் நல்லாத்தாம்மா இருக்கார்.''

''பின்னே?... அவர் உன் கூட வரலையா?''

''இனிமே அவரு என்கூட வரமாட்டாரும்மா. நான் தனிதான்.''

லட்சுமி பதறினாள்.

''ஜெயா! நீ என்னம்மா சொல்றே?''

தாயை நிமிர்ந்து பார்த்தாள். ஜெயாவின் கண்களில் நிறைந்து நின்ற நீர் சொட்டுச் சொட்டாகக் கன்னங்களில் விழுந்தது.

''அம்மா! அவரும் அவரோட நண்பரும் சேர்ந்து ஒரு பிஸினஸ் ஆரம்பிக்கப்போறாங்களாம். முதல்லே ஒரு ஐம்பதாயிரம் ரூபாய் வேணுமாம். பத்தாயிரம் ரூபாய் பேங்கிலே இருக்காம். மீதி நாற்பதாயிரத்துக்கு என்னோட நகையைக் கேட்டாரு. நான் இல்லேன்னு சொல்றதா? இல்லே... எங்க அம்மா அப்பா முப்பது பவுன் நகைதான் தங்கம் போட்டாங்க, பத்து பவுன் பித்தளைன்னு சொல்றதா? உண்மையைச் சொன்னா உங்க மானம் மரியாதை என்னாகும்? தவிர பித்தளை நகையைப் போட்டு ஏமாத்திட்டாங்க அப்படிங்கிற பழிச் சொல் உங்களுக்கு வந்துடாதா? அதனால அந்தப் பத்துப் பவுன் நகை தொலைஞ்சு போயிட்டதா அவர் கிட்டப் பொய் சொன்னேன். அதுக்கு அவர் கோபப்பட்டார்! 'பத்துப் பவுன் நகைன்னா அவ்வளவு அலட்சியமா? நீ உடனே உங்கம்மா வீட்டுக்குப் போய்ச் சேரு... வந்தா அந்தப் பத்து பவுன் நகையோட திரும்பி வா. இல்லே, திரும்பி வராதே. இத பார்... ஜெயா... பத்து பவுன் நகைக்காக உன்னை நான் உங்க வீட்டுக்கு அனுப்பலே. அந்தப் பத்து பவுன் நகைக்காக உங்கப்பா எவ்வளவு கஷ்டப்படுறார்னு நேர்ல பாரு. அப்பத்தான் இனிமேலாவது நீ ஜாக்கிரதையா இருப்பே'ன்னு சொல்லி அனுப்பி வெச்சாரும்மா. அப்பா! உங்க மானம் மரியாதையையும் நம்ம குடும்ப கௌரவத்தையும் நான் காப்பாத்திட்டேன். என்னோட வாழ்க்கையைக் காப்பாத்தறது உங்க கையிலதாம்பா இருக்கு...''

விம்மலுடன் வீட்டுக்குள் போனாள் ஜெயா.

லட்சுமி குமுறிக்கொண்டு வந்த அழுகையை அடக்க முடியாமல் அழ... சின்னச்சாமி அப்படியே அதிர்ந்து போய் நின்றார்.

---

மெஜ்பூப் நகர் அருகில் இருக்கும் காஞ்சிப் பெரியவர்களைத் தரிசிக்கச் சென்றிருந்தேன். சுவாமிகளுக்கு அருகில் அமர்ந்து அவரை நன்கு தரிசித்துக் கொண்டிருந்தேன். அப்போது ஒரு தம்பதி சுவாமிகளை நமஸ்கரித்துச் சில விஷயங்களைப் பற்றி ஆலோசனை கேட்டுக் கொண்டிருந்தனர். எல்லாம் முடிந்த பின் அந்தப் பெண்மணி சுவாமிகளை நமஸ்கரித்து, ''என் மாமியார் நன்றாக இருக்கணும்'' என்று வேண்டிக்கொண்டார். எனக்கு மெய் சிலிர்த்து விட்டது. ஒரு மாட்டுப் பெண் 'தன் மாமியார் நன்றாக இருக்கணும்' என்று சுவாமிகளிடம் ஆசி வேண்டினால் அந்த மாமியார் எவ்வளவு நல்லவராக இருக்க வேண்டும்!

—எஸ். சந்திரசேகர்



# இதோ ஒரு ஹேர்-டை எளிதாக உபயோகிக்கக் கூடியது, நம்பமுடியாத குறைந்த விலையில்!

கோத்ரெஜ் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் உங்களுக்காகவே விசேஷமான கலவை முறையில் தயாரிக்கப்படுகிறது.
இந்தியாவில் பவுடர் ஹேர் டை கான்ஸென்ட்ரேட் இது ஒன்றே. இது தானாகவே பரவுகிறது. ஆகவே நீங்கள் சிறிதளவே உபயோகித்தால் போதும்! மிகமிக முக்கியம், நீங்கள் நம்பமுடியாத அளவுக்கு குறைவான விலையில் இது கிடைக்கிறது!



**கலப்பது சுலபம்**
இந்தப் பவுடரை சிறிதளவு நீருடன் கலக்கவும். உபயோகிப்பதற்கு இப்போது தயார்.



**உபயோகிப்பது சுலபம்**
இதை சிரமமின்றி இலேசாகத் தடவுங்கள். தானாகவே ஒரே சீராக, மென்மையாக முடிமீது பரவி விடுகிறது. உங்கள் கேசத்துக்கு இளமையான அழகுத் தோற்றத்தைத் தருகிறது!






இந்தியாவில் தானாகவே பரவும் பவுடர் ஹேர் டை இது ஒன்றே.

Godrej
பவுடர்
ஹேர்-டை
கான்ஸென்ட்ரேட்

**தரமோ நீங்கள் நாடுவது விலையோ உங்களுக்குப் பிடித்தமானது.**

CASGS-168-203 TAM





சுனில் கவாஸ்கர்



ரவிசாஸ்திரி



கிர்மானி



சந்தீப் பட்டீல்



கீர்த்தி ஆஸாத்



வெங்சர்க்கார்

காப்டன் கபில்தேவ்

ஒரு நாள் — கிரிக்கெட் உலகக்கோப்பைப் போட்டியில், ஜூன் மாதம் 25ஆம் தேதி நள்ளிரவு, மேற்கு இந்திய டீமை இந்தியா வெற்றி கண்டது இப்போது அவ்வளவு சூடான செய்தியாக இராது. ஆனால் இது என்ன ப்ருடென்ஷியல் கப் மாட்ச்? எப்போது துவங்கிற்று இது? யார் ஆரம்பித்தார்கள் இப்படி ஒரு விறுவிறுப்பான கிரிக்கெட் ஆட்டத்தை? இதன் விதி முறைகள் என்ன?

அறிந்துகொள்ள ஆவலாக இருந்தது.

முன்னாள் 'ஹிந்து' கிரிக்கெட் விமரிசகர் திரு பி. என். சுந்தரேசன் விளக்கங்களை அளிக்க முன்வந்தார்.

இங்கிலாந்திலுள்ள ப்ருடென்ஷியல் இன்ஷூரன்ஸ் கம்பெனியார் சார்பில் ஆரம்பிக்கப் பட்டதுதான் இந்த ப்ருடென்ஷியல் கோப்பை லிமிடெட் — ஓவர்ஸ் மாட்ச். (இவர்கள் இந்த வருஷத்தோடு இந்தப் போட்டி நடத்துவதை நிறுத்திக்கொள்ளப் போகிறார்களாம். அடுத்த முறை இங்கிலாந்துக்கு வெளியே வேறு ஏதாவது நாட்டில் — ஏன் இந்தியாவிலேயே கூட — நடைபெறலாம்.)

இந்த உலகக் கோப்பைப் போட்டி ஆரம்பிக்கப்பட்டது 1975ல். நாலு வருடங்களுக்குப் பிறகு 1979ல் நடைபெற்றது. இப்போது 1983ல். முதல் இரண்டு முறையும் மேற்கு இந்திய அணிதான் ஆஸ்திரேலியாவையும் இங்கிலாந்தையும் லார்ட்ஸ் மைதானத்தில் வெற்றி கண்டது. தொடர்ந்து இரண்டு முறை ப்ருடென்ஷியல் கோப்பையை வென்ற சாம்பியன்களான மேற்கு இந்திய அணியை இந்த வருஷம் இந்தியா வெற்றி கண்டதுதான் இவ்வளவு குதூகலத்துக்கும் காரணம்!

இங்கிலாந்து கிரிக்கெட் விரும்பும் நாடாயிருந்தாலும், மாட்சுகளுக்கு ஜனங்கள் பெரும் அளவில் வராமல் இருந்தார்கள். மக்களைப் பெரும் கூட்டமாகக் கவர்ந்திழுத்து, உற்சாகமும், பரபரப்பும், பரவசமும் இந்தப் போட்டிகளைப் பார்ப்பதில் உண்டாக்கவே இந்த ஒரு நாள் மாட்சுகளைத் துவக்கினார்கள். குறைந்திருந்த வசூல் கூடவும் செய்தது!

ஒரே நாட்டில், உலகின் பல்வேறு பாகங்களிலுமிருந்து வந்து கலந்து கொள்ளும் சிறப்பான கிரிக்கெட் வீரர்களைப் பார்க்கக் கூட்டம் கூடுமல்லவா?

ப்ருடென்ஷியல் கப் ஆட்ட விதிகளை, இங்கிலாந்தில் உள்ள மெரிலிபோன் கிரிக்கெட் கிளப் (MCC)தான் வகுக்கிறது. ஒவ்வொரு அணியும் அறுபது ஓவர்கள் ஆடலாம் என்றால், ஒவ்வொரு போலரும் பன்னிரண்டு ஓவருக்கு மேல் போடக் கூடாது என்பதும் இதில் ஒரு விதி. அதே போல், ஆட்களை ஃபீல்டிங்குக்கு நிறுத்தி வைப்பதிலும் ஒரு சட்டம் இருக்கிறது. குறைந்த



# வென்றது இந்தியா



பட்சம் நாலு ஃபீல்டர்கள் விக்கட்டிலிருந்து முப்பது கஜ வட்டத்துக்குள் நிறுத்தி வைக்கப்பட வேண்டும்.

இந்த ஒரு நாள் பந்தயத்தில் ஒரு வேடிக்கை: பாட்ஸ்மன் கூடுமான வரை ரன்கள் அடித்துக் குவிக்க வேண்டும். பந்து வீச்சாளர் அதற்கு வழி வைக்காமல் செய்வது மட்டுமல்ல, விக்கெட்டுகளையும் எடுக்க வேண்டும். அதனால் 'ஸ்பின்'னை விட fast, medium pace பந்து வீச்சாளர்களே இதற்கு லாயக்கானவர்களாகக் கருதப்படுகிறார்கள்.

மற்ற ஐந்து நாள் அல்லது மூன்று நாள் மாட்சுகளுக்கும் இந்த ஒரு நாள் மாட்சுக்கும் கொஞ்சம் வித்தியாசம் உண்டு. டெக்னிக் மாறுபட்டது. இதில் ஒரு நாள் ஆட்டத்துக்குத் தகுந்த மாதிரி விளையாடும் திறமை (adaptability) வேண்டும்.

ப்ருடென்ஷியல் கோப்பையை, மேற்கு இந்திய அணியை வெற்றி கொண்டு இந்தியா அடைந்தது ஒரு சாதனைதான்; மறுக்கவில்லை. ஒரு கட்டுக்கோப்பான டீமின் வெற்றி இது. உண்மைதான். ஆனால் இதை வைத்து நமது இந்தியக் குழுவின் திறமையை மதிப்பிட முடியாது. எப்படி மேற்கிந்திய அணி, இங்கிலாந்து அணி இவற்றின் தோல்வியை வைத்து அவற்றின் திறனை மதிப்பிட முடியாதோ, அது போல. ஏனென்றால் ஐந்து நாள், 3 நாள் மாட்சுகளில் விக்கெட்டுகளை விசிக் கொடுக்காமல் நின்று ஆடக் கூடிய திறமை — கவாஸ்கர் மாதிரி — வேண்டும். இந்த ஒரு நாள் பந்தயத்தில், நேரத்தோடு போட்டியிட்டு ரன்களை எடுத்து விளாசும் திறமை வேண்டும் — ஸ்ரீகாந்த் மாதிரி.

இதில் ஏ குரூப், பி குரூப் என்று இரண்டு குழுக்களாகப் பிரித்து மோத விட்டிருக்கிறார்களே, அதைத் தீர்மானிப்பது எல்லாம் இன்டர்நேஷனல் கிரிக்கெட் கவுன்ஸில் (ICC) தான்.

இத்தனை சொன்ன பிறகு ஒரு பெரிய தகவலும் தந்தார் திரு பி. என். எஸ். இந்த மாதிரி உலகின் மிகத் திறமைசாலியான ஆட்டக்காரர்களை எல்லாம் சேர்த்து, ஒரே இடத்தில் உலக சாம்பியன்ஷிப் கிரிக்கெட் போட்டியை நடத்தலாம் என்று முதன் முதலில் ஐடியா தெரிவித்தவரே ஒரு தமிழர் தானாம். முன்னாள் இங்கிலாந்து காப்டன் நார்மன் யார்ட்லி இதை வரவேற்றதோடு இது சாத்தியப்படுமா என்றும் கேட்டு எழுதியிருந்தாராம்.

அந்தத் தமிழர் யார் தெரியுமோ?

முன்னாள் 'ஹிந்து' கிரிக்கெட் விமர்சகர் எஸ். கே. குருநாதன்தான்!

ஆக, இந்த உலகக் கோப்பை சாம்பியன்ஷிப் போட்டியின் குருநாதரே அவர்தான் இல்லையோ?

கொசுறு: டி.வி.யில் ஃபைனல்ஸ் பார்த்தவர்கள் அடிக்கடி பால்கனி காண்பிக்கப்பட்டதைக் கவனித்திருப்பார்கள். அதில் யாரும் இடம் மாறாமல் அசையாதிருந்ததையும் கண்டு வியந்திருக்கலாம். காரணம் இடம் மாறி அமர்ந்தால் அதிர்ஷ்டமும் இடம் மாறிவிடும் என்று ஒரு நம்பிக்கை!

பேட்டி: சாருகேசி, தமயந்தி


ஸ்ரீகாந்த்


மோஹிந்தர் அமர்நாத்


ரோஜர் பின்னி


யஷ்பால் சர்மா


சுனில் வால்ஸன்


மதன்லால்


சந்து

சந்து, சுனில் வால்சன் படங்கள்: நன்றி: ஸ்போர்ட் ஸ்டார்

## அத்தியாயம் 26

''பூவில் வண்டு கூடும்
கண்டு போகும்
கண்கள் மூடும்.''

மாலைக் காற்று நெற்றியை வருட வலக் கை மோதிரத்தின் அடிப்பக்கத்தில் கார்க் கதவில் மெல்லத் தாளம் தட்டி விஸ்வநாதன் பாடிக்கொண்டு வந்தான். சற்றைக்கொரு தரம் குனிந்து மவுண்ட் ரோடு சினிமா பானர்களை ஆவலுடன் கவனித்தான். இவள் இருப்புப் பற்றிய நினைவே இல்லாதவன் போல் எங்கெங்கோ சிந்தனைகளும் உதடு முழுக்கப் பாட்டுமாய் உட்கார்ந்திருந்தான்.

தந்தனம் தம் தந்தனந்தம்
தந்தனம்தம் தந்தனந்தம்

''ப்பா. வைரமுத்து கவிதை ஜிலீர்னு இருக்கு இல்லே'' என்று சட்டென்று இவளிடம் பேசினான்.

இவள் பதில் சொல்லாது வெறுமே சிரித்தாள்.

''மெட்ராசுக்கு வந்து எத்தனை படம் பாத்தீங்க?''

''இல்லே.''

''என்னது?''

''ஒரு படமும் பார்க்கலே.''

;;சினிமா போனீங்கல்லே....''

''ம்ம். எப்பவாவது யாராவது வற்புறுத்தினால் போவது உண்டு. ஆனா...''



''ஆறு....?''

''பாதிப் படம்தான் என்றுல பாக்க முடியறது. முழுக்கப் பார்க்கப் பொறுமையில்லே. நான் முழுசாப் பார்த்த படம் மூணே நாலோதான். அதுல ஒரு படம் நான் தூங்கிப் போய்ட்டேன்.''

''இன்டர்வெல்ல வந்துடுவேளா?''

''எங்கஊர்ல இன்டர்வெல்லுக்குமுன்னுடி வாசல் கதவு திறந்து விட மாட்டான். இல்லேன்னு பத்தாவது நிமிஷம் வெளியே வந்துடலாம்.''

''அதுக்கு சினிமா போவானேன்?''

''நியூஸ் ரீல் பார்க்கப் பிடிக்கும். நிறைய விளம்பரப் படங்கள் போடுவான். அதுலே சிலது பிடிக்கும். முக்கியமா விளம்பரப் படம் பார்க்கத்தான் போறது.''



விஸ்வநாதன் இடப் பக்கம் திரும்பிக் கூர்மையாய் அவளைப் பார்த்தான்.

''என்ன பாக்கறீங்க?''

''ஒன்னுமில்லே. நீங்க முழுசாப் பார்த்த தமிழ்ப் படம் எது?''

'''அவள் அப்படித்தான்'.''

''ஓ. நீங்கஆர்ட்ஃபிலிம் பார்க்கறவங்களா? ஆறு அதிலேயும் ஒரு நல்ல பாட்டு இருக்கு.''

''அந்தப் படத்துக்குப் பாட்டே தேவையில்லேன்னு பட்டது.''

''பாட்டில்லாத போறு படம் ட்ரையா இருக்காதா?''

''பாட்டா படத்தை சுரமாக்கறது?''

''பாட்டு மேலே உங்களுக்கு என்ன கோபம்?''

''கோபம் எதுவுமில்லே. பாட்டு அத்தனை முக்கியமில்லே.''

''எந்தப் பாட்டு, சினிமாப் பாட்டா?''

''எல்லாப் பாட்டும்தான்.''

''மைகாட். தடலடியாப் பேசறேளே?''

''நோ. என் அபிப்ராயம் பாட்டு போலியாத் தெரியறது எனக்கு. அதும் சினிமாப் பாட்டு ரொம்பப் போலி.''

''உதாரணமா?''

''நீங்க இத்த முன்னுடி பாடிய பாட்டு... பூவில் வண்டு கூடும் கண்டு போகும் கண்கள் மூடும்னு...'' காயத்ரி வசனமாய் அதைச் சொன்னுள்.''

''இதுல என்ன போலி. இட்ஸ் எ குட் லைன்.''

''நோ! பூவுல வண்டு உட்கார்ந்திருக்கறதைப் பார்த்தா நீங்க கண்ணை மூடிக்குவேளா? நான் கண்ணை மூடமாட்டேன். க்யூரியஸா அது என்ன செய்யறதுன்னு வேடிக்கை பார்ப்பேன். அது கூடல், கலவின்னு மனசில பட்டாலும் வெட்கம் வராது. எனக்குக் க்யூரியாஸிட்டி ஜாஸ்தியாயிடும்.''

விஸ்வநாதன் வாயில் கரைந்த எச்சிலே விழுங்கினுன். காரின் மேற் கூரையைப் பார்த்தான். ஐயோ பாவம், மன்னார்குடி பொண்ணுச்சேன்னு பேசினு இது இந்தப் போடு போடறதே!

''வெல். கொஞ்சம் அழகுணர்ச்சி தூக்கலா இருக்கு.''

''தட்ஸ் த ப்ராப்ளம். சினிமாவ சகலமும் தூக்கலாத்தான் இருக்கு. அழகுணர்ச்சி, அழுகை, வயலன்ஸ், டயலாக், டிரஸ், மேக்கப், செட் எல்லாம் அதிகமா இருக்கு. அதனுலதான் உக்கார முடியலே. சினிமா மட்டும்தானு? வாரப் பத்திரிகை, கதை, நாவல், பட்டிமன்றம், கவியரங்கம் எல்லாமே இங்கே ஒரே பளபளாதான்.''

''கவிதை கூடவா?''

''யெஸ். போன மாசம் மன்னார்குடில ஒரு கவியரங்கம். கவிதை சொன்ன அத்தனை பேரும் ரத்த சிம்மாசனம், மகரந்த புஷ்பம், பாரிஜாதம், ஒட்டகம், பாலைவனம்னு அதிரடிச்சாங்க. கவிதை இங்கே பட்டாசுக் கட்டா, ஜரிகைப் பேப்பரா, கண்ணுடி பாத்திரமா தவிக்கிறது.''

''ஒரு கவிதை எப்படி இருக்கணும்னு சொல்றீங்க?''

''இதென்ன இண்டர்வ்யூவா?'' காயத்ரி சிரித்தாள்.

''பரவாயில்லே. சொல்லுங்க. தெரிஞ்சுக்கத்தான் கேக்கறேன். சொல்லுங்க. கவிதை எப்படி இருக்கணும்?''

''மரத்து நிழல் மாதிரி, கூழாங்கல் சூடு மாதிரி, நீளமான தலை முடியை என்னை தடவிச் சீவுகிற சத்தம் மாதிரி. ஒரு அமைதியோட இருக்கணும்.''

''உதாரணமா...''

''மை காட். இது இண்டர்வ்யூதான்.''

''இருக்கட்டுமே.உதாரணம்சொல்லுங்க.''

''ம்ம். காயத்ரி யோசித்தாள். ''நாற்று நடும் பெண்களின் பாட்டுக்களில் மட்டும் தான் சேறு பட்டிருக்கவில்லை.''

''ம்ம்... அடுத்த லைன்?''

''அவ்வளவுதான் கவிதை. சத்தம் இல்லாத கவிதை. ரொம்ப சாதாரண லைன் மாதிரி படும். யோசிச்சா எங்கேயோ ரொம்ப ஆழமான இடத்தில கொண்டு போய்த் தள்ளிடும். இதுல தொனிக்கிற சோகம் கட்டிப் போட்டுடும்.''

''மறுபடி சொல்லுங்க.''

''நாற்று நடும் பெண்களின் பாட்டுக்களில் மட்டும் தான் சேறு பட்டிருக்கவில்லை.''

விஸ்வநாதன் திகைத்தான். ''இது யார் ....அப்பா சொல்லிக் கொடுத்தாரா?''

''எங்கேயோ படிச்சேன்.''

''மொழிபெயர்ப்புக் கவிதையா?''

''ஏதோ ஒண்ணு. ஆனா இதுதான் கவிதை; என்னைப் பாதிக்கிற கவிதை.''

''பாரதி படிச்சிருக்கேளா?''

''ம்ம்ம்.''

''அவன் கவிதை எப்படி? பளபளாவா, கண்ணாடிப் பாத்திரமா?''

''உடனே இப்படி க்ரூரமாகேள்வி கேட்கக் கூடாது. யோசிக்காமப் பேசக் கூடாது. கண்ணாடிப் பாத்திரமே கண்டு பிடிக்காத போது கண்ணாடிப் பாத்திரம் ஒத்திதான். தாரை தப்பட்டையே பெரியஒலியா இருக்கறப்போ பட்டாசு வெடி புரட்சிதான். மை ஊறின பேப்பருக்கு நடுவே ஜரிகைப் பேப்பர் அற்புதம்தான். ஆனா பாரதியோட வசன கவிதை படிக்கணும் நீங்க. சுத்தனும் வள்ளியும்னு. இரண்டு சணல் கயிறு துண்டு பத்தி எழுதின கவிதை. இன்னிக்கு எழுதறவர்கள் கவிதையை விட ஒசத்தி. இன்னும் ரொம்பக் காலத்துக்கு நிக்கப் போற ஒசத்தி. பாரதியோட சீட்டுக் கவிக்கும், விநாயகர் அகவலுக்கும், வாணி துதிக்கும், கொடி வணக்கக் கவிதைக்கும் தாண்டி நிற்கப் போற கவிதை அது.''

''எனக்குப் புரியலே.''

''பாரதியாரை நீங்க சரியாப் படிக்கலே.''

''உங்க வயசு என்ன காயத்ரி?''

''ஏன்?''

''வேற என்னெல்லாம் படிச்சிருக்கீங்க?''

''ஏன் கேக்கறீங்க?''

''உங்க வயசுக்கு இப்படித் தீர்மானமாப் பேசறது சரியா?''

காயத்ரிக்குள் சட்டென்று கோபம் படமெடுத்தது. ''வயசுக்கும் யோசிப்புக்கும் என்ன சம்பந்தம்?''

''வயசுங்கறது அனுபவம் இல்லையா?''

''வயசுக்கும் அனுபவத்துக்கும் என்ன சம்பந்தம்?''

''வயசு ஆக ஆக அனுபவம் அதிகமில்லையா?''

''வயதான முட்டாள்களை நீங்கள் சந்தித்த தில்லையா விஸ்வநாதன்?''

''நீங்கள் சந்தித்திருக்கிறீர்களா?''

''யெஸ்.''

''எக்ஸாம்பிள்....''

''நீ.''

சுரீரென்று பிரம்பால் கன்ன விளிம்பில் அடிவாங்கின பையன் மாதிரி கண நேரம் தவித்தான் விஸ்வநாதன். மனசுக்குள் முகத்தைப் பொத்திக் கொண்டான். நிமிர்ந்தான்.

''எதுக்கு என்னை முட்டாள்ங்கறீங்க?''

''என்னைக் கவிதை எப்படி இருக்கணும்னு கேட்டீங்க. நான் பதில் சொன்னேன். என் அபிப்பிராயத்தை நீங்கள் மறுத்திருக்க வேண்டும். கவிதை பற்றி உங்கள் இலக்கணம், கவிதை பற்றி உங்கள் அபிப்பிராயம் சொல்லியிருக்க வேண்டும். பாரதியின் உயர்வு பற்றிச் சொன்னேன். அதைத்தாழ்ச்சியாய் மனசில் வாங்கிக் கொண்டு என் வயசு பற்றிக் கேட்கிறீர்கள். விவாதம் புரியும் விதம் இதல்ல. என்னைவிட உங்களுக்கு வயது அதிகம். விவேகம் குறைவு.'' காயத்ரி வேகமாய் ஆங்கிலத்தில் பேசினாள்.

''உங்க அபிப்பிராயத்தைச் சரியான காரணங்களோட மறுத்துப் பேசினா மாத்திக்குவீங்களா?''

''நிச்சயமா மாத்திக்குவேன்.''

''அதாவது நீங்க தீர்மானமாப் பேசலைன்னு சொல்றீங்க.''

''எதைப் பத்தி யார் தீர்மானமாப் பேச முடியும்?''

''வெரி குட். எது பத்தியும் யாரும் தீர்மானமாப் பேச முடியாதபோது இவ்வளவு



(ஆபரேஷன் தியேட்டரில் ஒரு டாக்டர் இன்னொரு டாக்டரிடம்): ''நீங்க அதிகமா சினிமாப் பார்க்கிறது தப்பு இல்லே... அதுக்காக ஆபரேஷன் தியேட்டரில் கரண்ட் கட் ஆனதும் இப்படி விசில் அடிக்கிறது கொஞ்சம் கூட நல்லால்லே!''

—இளை அ. கதிர்வேல்

# நியூட்ரமுல் சக்தி.

## சேம்பியன்கள் தேர்ந்தெடுக்கும் சக்தி.

நியூட்ரமுல். அமுல் பால்வளம். அருமையான மால்ட்.
ஆரோக்கிய வைட்டமின்கள். ஆர்வமிகு புரதம்.
ஆதார உலோகதாதுக்கள். சப்புக் கொட்டிட சாக்கலேட்...
இவ்வளவுக்கும் விலை மலிவு—போர்ன்விடா, பூஸ்ட்,
மால்டோவா எதனையும் விட. மறவாதீர்கள் ஐஎஸ்ஐ தர
முத்திரை தாங்கியது நியூட்ரமுல் ஒன்றுதான்.
விளங்குவீர் நியூட்ரமுல் 'வஸ்தாத்'தாக.




உயரம், வலிமை, உடல்திடம்--
பெருக்குவது எப்படி ?

தாராசிங்கின் சலுகை: பலம்பெருக்கும் புத்தகம்!

NUTRAMUL P.O. BOX 10148, BOMBAY 400 001. kk

அன்புள்ள நியூட்ராமுல்,
தாராசிங்கின் "ஹைட் இன்ச்சீஸ், ஸ்ட்ரெங்த் அண்ட் ஃபிட்னஸ்" புத்தகத்தை தயவுசெய்து எனக்கு அனுப்பிவைக்கவும். ரூ. 1.50 மதிப்புள்ள தபால் வில்லைகளோடு, நியூட்ராமுல் 500 கிராம் டின் வாங்கியதற்கான ரொக்க ரசீதையும் இத்துடன் இணைத்துள்ளேன். ஸ்டாக்குகள் இருப்பிலுள்ள வரையே சலுகை என அறிகிறேன்.

பெயர் ____________________
(கொட்டை எழுத்துக்களில்)

முகவரி ____________________

விற்பனை விநியோகம்:
குஜராத் கோ-ஆபரேட்டிவ் மில்க்
மார்க்கெட்டிங் ஃபெட. லிட்.,
ஆனந்த் 388 001.

daCunha/GCM/76/TM/82

முரட்டுத்தனமா அபிப்பிராயம் சொல்றது சரிதானா? சந்தேகத்தோடதானே பேசியிருக்கணும்? ஒரு விஷயம் பற்றிச் சந்தேகம் இருந்தா இத்தனை கோபம் வருமா?''

''உங்களை முட்டாள்னு சொன்னது கோபம்னு நினைக்கிறீங்களா?''

''இது கோபம் இல்லாம... காதல் வயப்பட்ட பேச்சா? அதனால வந்த வெளிப்பாடா?''

''நாம் இலக்கியம் பேசறோம். என் தனிப்பட்ட உணர்வுகளை அல்ல.''

''அப்போது இலக்கியம் வேறு, பர்ஸனல் ஃபீலிங் வேறு? தனித் தனியா மனசுக்குள்ள கட்டம் கட்டி வச்சிருக்கீங்களா?''

காயத்ரி சூள் கொட்டினாள்.

''பூவில் வண்டு கூடும், கண்டு போகும், கண்கள் மூடும். வாஸ்தவம். இதுல அழகுணர்ச்சி கூடுதல்தான். பூவும் வண்டும் இணைவதைப் பார்த்து நாணப்படுகிற ஒரு நபரின் மெல்லிய உணர்வு என்று ஏன் எடுத்துக் கொள்ளக் கூடாது? உங்களை அந்தக் கவிதையில் ஏன் திணித்துக் கொள்கிறீர்கள்? தன் சலவைத் துணிகளுக்கு நடுவே பனியனுக்குப் பதிலாய் ப்ரா வந்து விட்டது என்று வெட்கப்பட்ட விடலைப் பையனைத் தெரியுமா உங்களுக்கு? ப்ரா என்பது வெறும் உள்ளாடை இல்லை அவனுக்கு. அது என்னென்னவோ விஷயம். ரொம்ப நாள் இது பற்றி அந்தப் பையன் புலம்பிக் கொண்டிருந்தான். அவனையும் முட்டாள் என்று அழைக்க வேண்டாம் காயத்ரி. மனித மனம் விசித்திரமானது. அதீத கற்பனைகள் செய்யக் கூடியது. கற்பனை தவறு என்று சொல்லாதீர்கள் மேடம். கற்பனை மனிதனின் சௌகரியம். இதுவரை அவன் வளர்ந்ததற்குக் காரணம் கற்பனைதான். விமானமும், காரும், கம்ப்யூட்டரும் கற்பனை வளர்த்த செடிகள்தான். கற்பனைச் செடியின் கனிகள்தான்.

''ஹ....'' காயத்ரி அவனை அலட்சியமாய் மறுத்தாள். ''கொலையும், கொள்ளையும், கற்பழிப்பும், யுத்தமும் கூட கற்பனையின் விளைவுதான் நண்பரே. இலக்கியத்திலிருந்து திசை மாறிப் பாய வேண்டாம். நிஜம் மறுக்கிறவருக்குத்தான் கற்பனை சௌகரியம். நிஜத்தின் வெம்மை தாங்காதவனுக்குத்தான் பாட்டும், பாட்டு மயக்கமும் அவஸ்யம். பூவில் வண்டு கூடுவது நிஜம். இயற்கை அளித்த வரம். அது வெட்கத்தை ஒருவனுக்கு அளிக்குமென்றால் அவன் பூவையோ வண்டையோ பார்க்காது தன்னைத் தன் கூடல் அனுபவத்தைப் பார்க்கிறானென்று அர்த்தம். மிஸ்டர் விஸ்வநாதன், என்னை அந்தப் பாட்டில் நான் திணித்துக்கொள்ளவில்லை. மாறாக நீங்கள் உங்களை, உங்கள் கூடல் அனுபவத்தை அந்தப் பாட்டில் திணித்துக் கொள்கிறீர்கள். அதனால்தான் போதையாய், பிடித்ததாய்ப் போய்விடுகிறது அந்தப் பாட்டு..''

''சபாஷ்! உங்கள் பேச்சிலேயே பதில் இருக்கிறது காயத்ரி. புரிந்துகொள்ளுங்கள். மனிதன் தோன்றி கல்ப கோடி காலமாயிற்று. இன்றுவரை அவனால் நிஜத்து வெம்மையைத் தாங்க முடியவில்லை. கோடானு கோடி மனிதர் இறந்து போய் விட்டார்கள். இன்னும் மரண பயம் போகவில்லை. கற்பனை என்பது நிழல்தான். குடை நிழல்தான். மனிதனால் அதைத் தவிர்க்கவே முடியவில்லை. முடியவும் முடியாது. பாட்டும், கவிதையும், நாவலும், நாடகமும் மனிதன் இங்கு இருக்கும்வரை இருக்கப் போகிற விஷயம்.''

''பழக்கத்தால் நிலைத்துவிட்ட விஷயம்.'' காயத்ரி இடைவெட்டினாள்.

''என்ன பழக்கம்?''

''பாட்டு சுகம் உயர்வு என்று சொல்லிக் கொடுக்கப்பட்டுப் பல் தேய்ப்பது மாதிரி அனிச்சையாய் ஈடுபடும் விஷயமாயிற்று. காலையில் பல் தேய்க்கிறபோது தெளிவோடு தேய்க்கிறவர் எவருமில்லை. மணியடித்ததும் பசியெடுத்து வாயில் எச்சில் ஊறுகிற மிருகம் போல பாட்டு என்றதும் பரவசமாகிப் போகிறது. மேலும் நிஜம் தெரிந்தவனுக்கு மரணமும் இல்லை, மரண பயமும் இல்லை.''

''கடவுளே!''

''யாரை அழைக்கிறீர்கள்? அப்படி யாரேனும் உண்டா?''

விஸ்வநாதன் இரண்டு கைகளையும் தூக்கினான். விவாதத்திலிருந்து விலகிக்கொள்வதாய் சைகை செய்தான். கார் காந்திலால் கம்பெனி வாசலில் நின்றது.

''அடடே. நான் சென்ட்ரல்ல இறங்கணுமே. விட்டுட்டேனே.''

''நான் கவனிச்சேன்.''

''எதை?''

''சென்ட்ரல் தாண்டறதை.''

''ஏன் சொல்லல்ல?''

''நீங்கள் முட்டாள்ங்கிறதை மறுபடி நிரூபிக்க.'' காயத்ரி இறங்கிக் கம்பெனிக்குள் நுழைந்தாள்.

வடிவேலு கடையிலிருந்து நாணு அய்யர் இறங்கி ''வாப்பா, வா'' என்று விஸ்வநாதனை அன்புடன் வரவேற்றார்.

(தொடரும்)



அவர்: சாப்பாட்டில் எதையோ பொறுக்கித் தனியா எடுத்து வச்சுக்கிட்டு இருக்கீங்களே கல்லா?

இவர்: சே!சே! அப்படியெல்லாம் இல்லே! சாதத்தைத் தான் பொறுக்கி எடுத்துக்கிட்டு இருக்கேன்!

—கடலூர் கன்னியப்பன்

வருடங்கள் போகலாம்
வயதுகளும் ஆகலாம்
ஆனால் எங்களது தேவை
விப்ரா பனியன்கள்

துள்ளிவிளையாடு ராஜா
தூயவண்ணஆடை ரோஜா,
உன் வெற்றி எங்கள் வெற்றி




தயாரிப்பவர்கள்



விப்ரா
ஹோஸைரீஸ்
திருப்பூர்-638604

அமரர் ஸ்ரீ ஸ்ரீவத்ஸ
ஸோமதேவசர்மா அவர்கள்
எழுதிய நூல்கள்

| | |
|---|---|
| நாற்பது ஸம்ஸ்காரங்கள் | ரூ. 9-00 |
| ஆபஸ்தம்ப பார்வண ஸ்ராத்தபிரயோகம் | 7-00 |
| ஆபஸ்தம்ப ஸூத்ர தர்ப்பண விளக்கம் | 3-00 |
| யஜுர் உபாகர்ம விளக்கம் | 2-00 |
| ஸூதக ஆசௌச விளக்கம் | 1-25 |
| வைகுண்ட ஏகாதசி 25 ஏகாதசி மஹிமை | 1-50 |
| துளசி பூஜையும் கதையும் | 2-00 |
| ஹிந்து மத பிரமாண நூல் | 1-50 |
| சிவராத்ரி பூஜையும் கதையும் | 1-00 |
| ஸங்கராந்தி பூஜையும் கோ பூஜையும் | 1-00 |
| பாதுகா பஞ்சரத்ந ஸ்தவம் | 4-00 |
| **THE HOLY ADVENT** (Sage of Kanchi) by R. Sankaranarayanan | 9-00 |
| **A LIGHT HOUSE AT 90** Ninety Speeches of H. H. Sage of Kanchi by N. Subramanian | 2-00 |



பவானி
புக்சென்டர்
19. ஸ்டேஷன் ரோடு,
மேல மாம்பலம், சென்னை-33





# அத்திம்பேர்



## விட்டல்ராவ்

என்னவளுக்கு ஊரில் தனியார் பள்ளி ஒன்றில்ஆசிரியைவேலே. எனக்குஇங்கேவேலே. கல்யாணமானதிலிருந்து இப்படித்தான். அலுவலகத்துக்குக்காலேயில்போனல் மீண்டும் வந்து சேர 'இரவு எட்டாகும். இரவு ஒரு வேளேச் சாப்பாட்டுக்கு நிச்சயம் சுய சமையல் தான். வேறெங்கும் சுற்றப் போவதில்லே. யாருடனும் இப்போது அதிகம் வைத்துக் கொள்வதில்லே. ரேடியோவை அலற விடுவ தில்லே. என் ஒருவனுடைய பகுதியின் கதவு தான் சாத்தியே வைக்கப் பட்டிருக்கும்.

இது ஒரு மூன்றடுக்கு மாடியில் நெருக்க மாய் அமைந்த சின்னச் சின்னக் குடியிருப்பு மனேகள். ஒவ்வொரு பகுதிக்கும் தனித் தனி யாகத் தண்ணீர்த் தொட்டி முதல் வசதி உண்டு. என்னேப் பற்றியொரு கௌரவமான அபிப்பிராயம் என்னேச் சுற்றியுள்ள குடி யிருப்புக்களில் வியாபித்திருந்தது. கீழே போகும்போதும், இரவு, மேலே ஏறி வரும் போதும், ஒரு டஜன் 'குட்மார்னிங் சார், குட் ஈவினிங் சார்' மரியாதைகளுக்கு நான் கட்டாயப்படுத்தப் பட்டிருந்தேன்.



''நேத்து போஸ்ட் மேனுக்கும் உங்களுக்கும் தகராறுமே''

''ஆமாம் சார்.... பத்திரிகையிலிருந்து திரும்பி வந்த கதையைக் கொடுக்கும்போது 'சார், வேஸ்ட்!'னு குரல் கொடுத்தால் கோபம் வரத்தானே செய்யும்!''

—ஆர். இளங்கோ.

நேர் எதிர் போர்ஷன் என் விசேஷ கவ னத்தைப் பெற்று வந்தது. மாமியை அதிகம் வெளியில் பார்த்ததில்லே. நான் ஜன்னல் வழி யாக அவரைத்தான் பார்ப்பேன். ஒரு ஹலோ. ஐந்து பெண்கள். ஒரே ஒரு அம் மாஞ்சிப் பையன். ஐந்தாவது பெண் ஜெருசுத்திதான் படித்துக் கொண்டிருப்பவள் பிளஸ் டூ. பையன் லெண்டிங் லேப்ரரி, கிரிக்கெட் வர்ணனே, 'பேய்ட் வர்ரேன்... பேய்ட் வர்ரேன்' என்று கத்திக் கொண்டு ஹவாய்ச் செருப்பு சப்திக்க ஓடுவது போன்ற வேலேகளில் இருப்பவன். ஐந்து பெண்களேப் பெற்ற அலுப்பும், கவலேயும் அவருடைய சுரத்தேஇல்லாத ஹல்லோவில்கூடத்தொனிக் கும். மூத்தவளுக்குக் கல்யாணமாகி வயிற் றில் இதுவரை புழுப் பூச்சியில்லே. இரண் டாவது பெண்ணுக்குக் கைவசம் இரண்டு பெண் குழந்தைகள் இப்போது பிரசவத் திற்காக வந்திருக்கிறுள். அடுத்த இரண்டு ராஜகுமாரிகளும் ஜன்னலில் சுயம்வரத் திற்குக் காத்திருப்பது போல் நிற்கிறுர்கள்.

அம்மாஞ்சிப் பயல் ஒரு நாள் தன் அத்திம் பேரை என் பகுதிக்கு அழைத்து வந்து அறிமுகப்படுத்தி வைத்தான். — ஒழிந்து படிக் காவிட்டால் அவருக்குத் தலே சிதறிவிடு மாம் — என்பதற்காக என் சிநேகிதம். பிறகு தினமும் காலேயில் தடாலென நுழைந்து சுசமுசா என்று பத்திரிகையைப் பிரித்துப் போட்டு விட்டுப் போவார். தாடி யும் மீசையுமா யிருப்பதைப் பார்த்து நான் கேட்க, அவர் சொல்லத்தான், பிரச வத்துக்காகக் கொண்டு வந்து விட வந் திருப்பது தெரிந்தது.

''ஒடம்பு சரியில்லேயா?''

''விட்லே விசேஷமாச்சே. உட்டுட்டுப் போக வந்திருக்கேன்...'' என்று சொல்லி விட்டுச் செறிவாக வளர்ந்திருந்த தன் தாடியை வரக் வரக்கென்று சொறிந்து கொண்டார்.

கொண்டு வந்து விட்டு விட்டு அத்திம்பேர் புறப்பட்டுப் போய்விடவில்லே. அந்த வீட் டில் ஏற்கனவே கும்பல். இட வசதி குறைவு. மங்களிப் பெண்டுகள் என்று ஒரு நாளேக்கு வைத்துக் கொண்டதால் மூத்த பெண்ணும் மாப்பிள்ளேயும் வந்து இறங்கியிருந்தார்கள். யாரும் வந்தோம் போனேம் என்றில்லே. அந்த மாமாவின் ஹலோ ஏன் அவ்வளவு பல ஹீனமாயிருக்கிறதென்பது இப்போதுதான் விளங்குகிறது. அவர்களுடைய தண்ணீர்த் தொட்டியில் சீக்கிரமே தண்ணீர் செல வழிந்துபோய், குழாயில் தண்ணீர் வராது. நான்கைந்து பிளாஸ்டிக் பக்கெட்டுடன் இரண்டு ராஜகுமாரிகளும் என்னுடைய பகுதிக்குள் நுழைந்து விடுவார்கள்.

''ஒங்களதுலேஜலமெடுத்துக்கறேம்மாமா''

என்னுடைய கணிப்பில் பிரசவமாக இன்னும் ஒரு மாதம் பிடிக்கலாம். அதுவரை அந்த அத்திம்பேரும் வந்து தங்கியிருப்பது மிகவும் அதிகமாய்ப் பட்டது எனக்கு.

நான்காவது நாள் இரவு எட்டு மணிக்குக் கதவைத் தட்டிவிட்டுத் தன் பாய், தலேயணே



யோடு அத்திம்பேர் என் வீட்டுக்குள் நுழைந்து விட்டார்.

''அவாத்திலே இடமேயில்லே'' என்றார்.

''நானே சொல்லணும்னு இருந்தேன். நா இப்போதைக்கு ஒண்டியாத்தானே இருக்கேன். வந்து படுத்துக்கச் சொல்லலாம்னு இருந்தேன்'' என்றேன் நான். உண்மையிலேயே நான் அப்படி நினைத்திருந்தேன்.

அத்திம்பேருக்கு அமைதியாக இருப்பது பிடிக்காதோ என்னவோ, முதல் நாளே கேட்டு விட்டார்.

''விவித் பாரதி இருக்குமே... வைங்களேன்.''

நான் டிரான்ஸிஸ்டரை வைக்காவிடில் அவரே எழுந்து போய்த் திருப்பி விடுவார் போலிருந்தது. எனக்கு என்னுடைய சில பொருள்களை மற்றவர்கள் தொடக் கூடாது என்று. அதற்காகவேனும், எனக்குப் பிடிக்கவில்லையென்றாலும் டிரான்ஸிஸ்டரை வைக்க வேண்டியிருந்தது.

''இன்னும் தள்ளி ஃபானுக்கு அடியிலே வந்து படுத்துக்கங்களேன். காத்து நல்லா வரும்'' என்று உபசாரம் செய்ததில் கொஞ்சம் ஊர்ப் பிடாரியாகப் போனேன்... என்னை மூலைக்கே தள்ளி விட்டார்.

அவருக்குச் சதா தன்னுடைய இலாகா பற்றியே பேச்சு. எனக்கு அவருடைய இலாகா சம்பந்தமாய் ஒரு இழவும் தெரியாது. ஏதோ நானும் அவரோடிருப்பவன் போல் நினைத்துக் கொண்டு அங்குள்ள விஷயங்களை என்னிடம் சொல்லிக் கொண்டிருப்பார். சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொல்லிக் கொண்டு...

''அத்திம்பேர் அத்திம்பேர்'' என்று தேடிக் கொண்டு அவருடைய மச்சினிகள் இருவரும் வந்து வந்து போவார்கள். அத்திம்பேரை அவர்களுக்கு ரொம்பவும் பிடிக்கும்போலவிருக்கிறதே என்றிருந்தேன். அப்படியில்லை. என் வீட்டில் என்ன என்ன வைத்திருக்கிறேன் என்று பார்த்துப் போகத்தான் வந்திருக்கிறார்கள் என்று எண்ணத் தோன்றிற்று.

நான் எதையும் வைத்திருக்கவில்லை. எல்லா அறைகளுமே காலியாக வெறிச்சென்று இருந்தன. அதனாலேயே சுத்தமாகவும் சுகமாயும் தோன்றும். ஹோட்டலில் ஒரு நாளைக்கு வாடகைக்கு எடுக்கும் அறையைப்போல வைத்திருந்தேன்.

அத்திம்பேர் தூக்கத்தில் புரண்டு உருண்டு படுக்கக் கூடியவர். எனவே நான் மின் விசிறி தொங்கும் அறையை அவருக்கே விட்டு விட்டு, காற்றோட்டமில்லாத ஹாலில் படுத்துக் கொள்ளத் தொடங்கினேன். தற்காலிக அசௌகரியங்களை நான் எப்போதுமே தாங்கிக் கொள்ளக் கூடியவன்தான். என்றாலும் தற்காலிகத்தனத்திற்கு ஒரு மீட்சி எல்லை இருந்தாக வேண்டுமே... அத்திம்பேர் விஷயத்தில் அந்த எல்லை எவ்வளவு தொலைவில் இருக்கிறது என்று ஏங்கத் தொடங்கி விட்டேன்.

ஆபீசுக்குப் புறப்பட்டுவிட்ட நான் கதவைப் பூட்டிக் கொண்டிருந்தபோது அத்திம்பேர் விரைந்து வந்தார்.

''சார், கொஞ்சம் சாவியைக் குடுத்துட்டுப் போங்கோ...'' என்றார்.

மிக மிக நெருங்கிப் பழகும் ஒருவனைப் போல — மிகவும் வேண்டப்பட்டவனைப்போல இருந்தது அவர் இப்படியொரு சலுகையை என்னிடம் எதிர்பார்ப்பது. மழலைப் பருவ மெல்லாம் தாண்டி விட்ட ஒரு பெரிய குழந்தை வேண்டுமென்றே குட்டிப் பாப்பாவைப் போல் செயற்கையாக மழலை பேசுவது போல இருந்தது அவர் காட்டிக் கொண்ட உறவு நெருக்கம். உறவில் விலகல் இருந்தால்தான் நெருக்கம் அதிகம் என்பான் என் நண்பனொருவன். ஆனால் இந்த வீட்டு அத்திம்பேரைத் தவிர்க்க முடியாமல் நான் சாவியைக் கொடுத்துவிட்டுக் கிளம்பினேன். அவருடைய மச்சினிகள் அழுக்குத் துணிமணிகள், இரவு குழந்தைகளால் ஈரமாகிப்போன பாய் முதலியவற்றைச் சுத்திகரிக்க என் வீட்டுக்குள் நுழைவதைப்பார்த்தவாறே படிக்கட்டுகளில் இறங்கினேன்.



''கவர்ச்சிக்கன்னி காந்தாஸ்ரீ வீடு இதுதானே?''
''பாட்டி! பாட்டி! உன்னை யாரோ தேடிக்கிட்டு வந்திருக்காங்க!''
—இரவிச்சந்திரன்.

மூன்று குழந்தைகளுக்கு — மூன்றாவது இந்த மாதத்தில் ஜனித்து விடுமாதலால்— தகப்பனான பின்பு கூட அத்திம்பேர் என்னிடம் — விவித் பாரதி நின்ற பின் ஆண் பெண் உறவு விஷயத்தில் மிகவும் அடிப்படையான சந்தேசமாய்ச் சிலவற்றைக் கேட்பதுண்டு. எனக்கு எரிச்சல் பாதி, சிரிப்புப் பாதி. அப்படித்தான் நானும் அவரிடம் ஒன்றைப் பேசி விட்டேன். அவர் என்னிடம் எடுத்துக் கொண்ட சுதந்திரத்தில் நானும் கேட்டு விட்டேன். வேறு ஒன்றுமில்லை.

''சொல்றேனேன்னு தப்பா எடுத்துக்காதீங்கோ...'' என்று எச்சரித்துவிட்டுத்தான் ஆரம்பித்தேன்.

''குடும்பக் கட்டுப்பாடுங்கிற ஒரு விஷயத்தைப் பற்றி நீங்க திங்க் பண்ணினதுண்டோ?''

''ஏன்?'' என்றார் திடுக்கிட்டவராய் அத்திம்பேர்.

''ஏனுங்கிறது அப்புறம். நினைச்சுப் பார்த்தது உண்டானு கேட்கறேன்'' — என்றேன் மீண்டும்.

''இன்னும் அந்த அவசியம் எனக்கு வந்துடல்லே'' — என்றார். சற்று கடுகடுப்பு ஏறியிருந்தது.

''ரெண்டு பொண்ணாயிடுத்தே சார்.... ரெண்டோடேயே நிறுத்தியிருக்கலாமே... இப்போ மூணாவது...'' என்று இழுத்தேன்.

''முதலிலே வச்சுப் பொறந்தாச் சரி, இரண்டாவதுபையனு பொறப்பான், பொறக்கட்டும்னு இருந்துட்டேன்... நடக்கல்லே. சீதாக்குட்டி பொறந்துட்டது.''

''சரி, அத்தோடாவது நிறுத்தியிருக்கலாமே சார்....''

''அதெப்படி, ஆம்பளைக் குழந்தையொன்று வேணுமா? அப்படின்னுதான் இப்போ.... அதுக்குத்தான்....''

''இப்போ பிறக்கப் போறது மட்டும் ஆம்பிளைக் குழந்தைதான்னு என்ன நிச்சயம் சார்? மறுபடியும் ஒரு புஷ்பாவோ ராதாவோ பொறந்துட்டா?''

அவருக்குச் சட்டென்று முகம் மாறிற்று.

''நீங்க வாய் வைக்காதீங்கோ'' — என்றார் கடுகடுப்போடு.

அவருடைய கடுகடுப்பைக் கண்டு நான் அரண்டுவிடவில்லை. இந்த மனிதனை ஒரு கை பார்த்து விடுவது போல் இருந்தது எனது நரம்புக்கு.

''ஒரு குழந்தைக்கும் அடுத்த பிரசவத்துக்கும் போதுமான அளவு கால இடை

சென்னை அடையாறில் புதிய ஜவுளி மாளிகை!

முன்னணி மில்களில் தயாராகும் வாயில், செமி வாயில்,
புல் வாயில், டெரி வாயில், டெரீன், பாலியெஸ்டர்,
டிஸ்யூ புடவைகளையும், உயர் ரக ஷர்ட்டிங் & சூட்டிங்,

மற்றும்

சட்டை பாவாடை துணிகள், யூனிபாரம்

அனைத்தையும், மிகக் குறைந்த விலையில் வாங்க,
நம்பிக்கையான ஸ்தாபனம்

**ஆனந்தாஸ்**

5/1, எல். பி. ரோடு, அடையாறு கார்னர்,
சென்னை-600 020

இன்றே குடும்பத்துடன் வருகை தாருங்கள்


**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அவர்களின் அருள் உரை**

எல்லோரும் க்ஷேமமாக வாழ ஏழைகளிடமும் அனாதைகளிடமும் அன்பு கொண்டு அவர்களின் கஷ்டத்தை நிவர்த்திப்பதில் பங்கு கொள்வதுதான் அடிப்படையான தர்ம மார்க்கமாகும். வசதியுள்ளவர்கள் இதே மனப்பான்மையுடன் தாராளமாய் இருந்தால்தான் நன்மையை அடைய முடியும்.

நம் நாட்டில் ஆஸ்பத்திரிகளிலும், தெருக்களிலும் தெருச்சாலைகளிலும் அடிக்கடி அனாதை மரணங்கள் சம்பவிக்கின்றன. இதர மதஸ்தர்கள் தங்கள் மதத்தைச் சேர்ந்த அனாதை பிரேதங்களை அந்தந்த இடங்களிலிருந்து தாங்களே வாங்கிக் கொண்டு தங்கள் மதக் கொள்கைப்படி ஸம்ஸ்காரம் செய்கிறார்கள். நம் மதத்தைச் சேர்ந்த இறந்தவர்கள் பிரேதங்கள் அநேகமாய் ஸர்க்கார் ஊழியர்களாலேயே எவ்விதச் சடங்கும் இன்றி புதைக்கப்படுகின்றன.

இவ்விதச் சம்பவங்கள் நேரிட்டால் உடனே அந்த பிரேதத்தை அது எந்த உட்பிரிவைச் சேர்ந்ததோ அந்தப் பிரிவைச் சேர்ந்தவர்களுக்கு ஏதாவது பொருளுதவி செய்தாவது அவர்களைக் கொண்டு முறைப்படி ஸம்ஸ்காரம் செய்விப்பது நம் ஒவ்வொருவருடைய கடமையாகும். அச்வமேத யாகத்திற்குச் சமமான இந்தப் புண்ணிய காரியத்தை ஏக தேசத்தில் நமக்குச் செய்ய சக்தி இல்லாமற் போனால் அன்பர்கள் பலர் சேர்ந்து கொண்டாவது அல்லது தர்ம ஸ்தாபனங்களிலிருந்து பொருளுதவி பெற்றாவது இந்த உத்தம பணியைச் செய்து முடிக்க வேண்டும்.

'அனாதை பிரேத ஸம்ஸ்காராத் அச்வமேத் பலம் லபேத்' என்பது ஆன்றோர் வாக்கு. எந்த ஜாதியாராயினும் அனாதை பிரேதங்களை நாம் கண்டால் நமக்கு இந்த உயர்ந்த கைங்கர்யம் கிடைத்ததே எனப் பெரு மகிழ்ச்சி அடைய வேண்டும். ஒரு பெரிய அச்வமேத யாக பலனை அடையும் சந்தர்ப்பம் நமக்குக் கிடைப்பதை நாம் இழக்கவே கூடாது. இதனாலுண்டாகும் இவ்வச்வமேத பலனை ஸ்ரீ அம்பிகையின் சரணத்தில் அர்ப்பணம் செய்ய வேண்டும்.

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ர நாமத்தில் "வர்ணாச்ரம விதாயினீ அச்வமேத ஸமர்ச்சிதா" என்னும் நாமங்களால் குறிப்பிடப்படும் ஸ்ரீ மாதாவின் கிருபையால் அவளுடைய குழந்தைகளான எல்லா ஜாதி, வர்ண, குல ஆச்ரமங்களைச் சேர்ந்த ஜீவகோடிகள் எல்லோருக்கும் பரஸ்பரம் உண்மையான சகோதர மனப்பான்மை ஏற்பட்டு அதன் மூலம் உலகத்திலே அன்பும், பொருளும், அருளும் குறையாது வளர இந்த அச்வமேத கைங்கர்யமே அஸ்திவாரமாகும்.

ஆச்சாரியாளுக்குகந்த இந்த தர்மத்தில் கீழ்க் கண்டவாறு நீங்களும் பங்கு கொள்ளுங்கள். அனாதைகளுக்கு ஆதரவு அளியுங்கள்.

1. ஒரு உடலுக்கு ஸம்ஸ்காரச் செலவு ரூ. 35-37 ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ. 400 மூலதனம் ஏற்படுத்திக் கொடுத்து இதற்குக் கிடைக்கக் கூடிய வட்டியைக் கொண்டு இது நடக்கும்படி செய்யலாம்.
2. 101 ரூபாய் கொடுத்து ஆயுள் அங்கத்தினராகலாம்.
3. பிரதி வருஷமும் ஒரு உடலுக்காகும் ஸம்ஸ்காரச் செலவு ரூ. 35-37 கொடுத்து உதவலாம்.
4. பிரதி வருஷமும் உங்களால் முடிந்த அளவு ரூ. 1க்குக் குறையாமல் கொடுத்து உதவி அளிக்கலாம்.
5. இதுவும் முடியாதவர்கள் பலரிடமும் இந்த தர்மத்தை பிரசாரம் செய்து வாக் ஸகாயம் செய்யலாம்.

தொகையை அனுப்ப வேண்டிய விலாசம்:

**காரியதரிசி, ஹிந்து மத ஜீவாத்ம கைங்கர்ய சங்கம், 14, காமாக்ஷி ஜோஸ்யர் தெரு, கும்பகோணம்**

வெளி தானும் சார். ஒய்வே இல்லாம மனைவியை மட்டர்னிடி சென்டருக்கு அனுப்பறது தப்பு. இப்போ பிறக்கிறது ஆண் தான்னு எப்படிச் சொல்றது... ஒரு வேளை பொண்ணு இருந்துட்டா, ஆம்பிளைக் குழந்தை வேணும், பொறந்தாகணும்னு மறுபடியும் காரியத்திலே இறங்கிடுவீங்களோ?'' என்றேன் குரலை உறுதியாக்கி.

''ஏன் பொறக்காது. நான் சொல்றேன் ஆம்பிளைதான்னு... எனக்கு நம்பிக்கை இருக்கு....''

''நீங்க வேணாப் பாருங்கோ... நா சொன்னுக் கரெக்டா இருக்கும். இதுவும் பொண்ணுத்தான் இருக்கும்.''



ஒருவர்: என்னசார் மணிஎன்ன ஆச்சன்னு கேட்டா கட்டிப் பிடிச்சுமுத்தம்தர்ரீங்களே.''

மற்றவர்: நான் கடிகாரம் கட்டி நீங்கதான் சார்,முதல் ஆள். என்கிட்ட மணி கேட்டது!

—ஆர். வசந்தகுமார்

''சரி, இருந்தா இருந்துட்டுப் போகட்டும் போங்கோ....''

''இந்தத் தடவையாவது தவறும இத்தோட குடும்பக் கட்டுப்பாடு பண்ணிக் கிடுங்கோ.''

''பையன் பொறந்துடுவான் சார்...''

''இல்லேன்னாலும் இத்தோட நிறுத்திக் கோங்கோ....''

''எதுக்கு இல்லேன்னு இல்லேன்னுன்னே வாய் வைக்கிறீர்?''

''பொண்ணுதான் பாருங்கோ வேணு மானு?''

அவர் அதற்கு மேல் ஒன்றும் பேசவில்லை.

காலையில் நான் கண் விழித்தபோது வாசற் கதவு பேயென்று திறந்து கிடந்தது. பால் கவரும், பிரிக்கப்படாத ஹிந்துவும் கிடந்தன. நான எழுந்திருப்பதற்கு முன்பாகவே அத்திம்பேர் எழுந்து போய்விட்டிருந்தார். எழுந்து மின் விசிறியை நிறுத்தி விட்டு வந்து உட்கார்ந்தேன். ஆபீசுக்குப் போகும்வரை ஆங்கில தினசரிக்காக அத்திம்பேர் வரவில்லை. அன்றெல்லாம் வரவேயில்லை. இரவுக்கும் படுத்துக்கொள்ள வரவில்லை. நான் அப்படி யெல்லாம் கேட்டதில் என் பேரில் கோபம் என்று புரிந்தது.

அடுத்த நாள் வழக்கத்திற்கு மாறாக வாசல் கதவைத் திறந்தே வைத்திருந்தேன். மாறாக அவர்கள் வீட்டுக் கதவு சாத்தியே கிடந்தது. அம்மாஞ்சிப் பையனைக் கூட என்னோடு பேச வேண்டாம் என்று உத்தரவு போலும். நான் ஆபீசுக்குப் போகும்வரை கதவைத் திறந்தே வைத்திருப்பேன். நான் போகும்வரை அவர்கள் வீட்டுக் கதவு சாத்தியே இருக்கும். இரவு நான் படியேறி வரும்போது அவர்கள் வீட்டுக் கதவை அவர்களில் யாரோ ஒருவர் என் முகத்தில் ஓங்கி அறைந்து சாத்திக் கொள்வதென் றாகி விட்டது இப்போது. நானும் கதவைச் சாத்தி வைத்து விட்டேன் இப்போது.

மின்சார மணி அடிக்கவே கதவைத் திறந்து வெளியில் எட்டிப் பார்த்தேன். யாருமில்லை. தெரியாத்தனமாய் யாரோ பஸ்ஸரை அழுத்தியிருக்க வேண்டுமென்று எண்ணிக் கொண்டு கதவைச் சாத்திக் கொண்டேன். அன்றிரவு கூட மின்சார பஸ்ஸரடித்தது.

வேண்டுமென்றே யாரோ என் வீட்டு பஸ்ஸரை அழுத்திவிட்டு ஓடுவது புரிகிறது. ஆனால் இனமும் இருந்து வந்த இந்தத் தொந்தரவு திடீரென்று ஒரு நாள் நின்று போனது.

வீடு பெருக்கும் ஆயா வந்து சொன்ன பிறகுதான் எனக்குத் தெரிய வந்தது.

''ஒனக்குத் தெரியாதா சார், அவங்கூட்ல கொய்ந்தக்கிப் பேரு வக்கிறாங்க இன்னிக்கி'' என்றாள் அவள்.

''என்ன குழந்தை ஆயா?'' என்று கேட்டேன் நான்.

''பொண்ணு....'' என்றாள் ஆயா.

அந்த ஃபிளாட்டில் உள்ள பல வீடுகளுக்கும் அழைப்பு, இருந்தது. மாலையில் தொட்டிலில் போட்டுப் பெயர் சூட்டும் வைபோகம் நன்றாக இருந்திருக்க வேண்டும். ஆணும் பெண்ணுமாய்க் கையில் பரிசுப் பொருள்களுடன் வருவதும் போவதுமா யிருந்தார்கள். கடித்த குரலில் இரு பெண் மணிகள் பாடுவது கேட்டது. என்னை அழைக்கவில்லை. என்னை அழைக்கவேயில்லை. போகட்டும்.

இன்னும் இரண்டு நாட்களுக்குத் தண்ணீர்த் தொட்டியில் தண்ணீர் ஏறாது. என் வீட்டில் நான் ஒண்டியாள். தண்ணீருக்குச் செலவில்லை. என் வீட்டுத் தொட்டியில் முக்கால்க்கு இருக்கும். காலையில் நிச்சயம் அவர்கள் பிளாஸ்டிக் பக்கெட்டுகளுடன் தண்ணீருக்கு அலைவார்கள்.

நான் கடைசிச் சந்தர்ப்பமாய் அதற்குக் காத்திருந்தேன்.




# நல்லதும் கெட்டதும்

**வ.தேனப்பன்**

சினிமா உலகின் நெளிவு சுளிவுகள் தெரியாமல் ஒரு குடும்பப் படத்தை—மருந்துக்குக் கூட செக்ஸ் இல்லாமல் – சுத்தமாக எடுத்து விட்ட சுந்தரம் விழி விழியென்று விழித்தார்.

'ஐம்பது வருடங்களுக்கு முன்னால் வந்திருக்க வேண்டிய படம் இது' என்று ஒரு பத்திரிகை விமர்சனம் எழுதி விட்டாலும் சரி, படம் கோவிந்தாதான்!

பத்திரிகைகளின் விமர்சனத்தைப் பொறுத்துத் தான் படங்கள் ஓடுகின்றன என்ற உண்மையை அவர் உணர்ந்தார்.

''பத்திரிகையாளர்களுக்குப் 'ப்ரீவியூ' காட்சிக்கு ஏற்பாடு செய்து அமர்க்களமாய் விருந்தும் ஒரு அன்பளிப்பும் கொடுத்து விட்டால் போதும். முக்கால்வாசிப் பத்திரிகைகள் இதில் மசிந்து பாராட்டித் தள்ளிவிடும். அப்புறம் படம் வெள்ளி விழாவில் போய்த்தான் நிற்கும். உங்கள் படம் தரமாக இருக்கிறபோது, துணிந்து பத்திரிகையாளர்களுக்காக ஒரு ஸ்பெஷல் காட்சிக்கும் விருந்துக்கும் ஏற்பாடு செய்தால் என்ன?'' என்று கேட்டார் சுந்தரத்தின் நண்பர் அமிர்தலிங்கம்.

''அந்த அளவுக்கு என் கிட்டே பணமில்லே. என் நண்பர்கள் ரெண்டு பேர் ரெண்டு பத்திரிகைகளிலே துணை ஆசிரியரா இருக்காங்க. அவங்களுக்கு மட்டும் வேணும்னா இந்த ஏற்பாட்டைச் செய்யலாம்!'' என்றார் சுந்தரம்.

''ஒரு துணையும் இல்லாம இருக்கிறதை விட, ரெண்டு பத்திரிகையோட சப்போர்ட் கிடைக்கிறது பரவாயில்லே. உடனே அதுக்கு ஏற்பாடு பண்ணுங்க!'' என்று ஊக்கினார் அமிர்தலிங்கம்.

படத்தைத் தனது நண்பர்களான ஐயப்பனுக்கும் துரைக்கும் போட்டுக் காட்டினார் சுந்தரம்.

''படம் பிரமாதமா அமைஞ்சிருக்கு. கவலைப்படாதீங்க. அடுத்த இதழிலேயே விமர்சனம் போட்டுடுறோம்!'' என்று கூறி விட்டுச் சென்றார்கள்.

ஐயப்பனின் விமர்சனம்தான் முதலில் வெளி வந்தது.

தரமான குடும்பக் கதையையும், வசனத்தில் உள்ள கருத்தாழத்தையும், உணர்ச்சி பூர்வமான நடிப்பையும் பாராட்டி எழுதியிருந்தான். 'மொத்தத்தில் மிக நல்ல படம்' என்று முடித்திருந்தான்.

அந்த விமர்சனம் வந்ததும் அன்று மாலையே தியேட்டர்களில் ஹவுஸ் ஃபுல் ஆகிவிடும் என்று எதிர்பார்த்துச் சுந்தரம் ஒவ்வொரு தியேட்டராக அலைந்ததுதான் மிச்சம். கொஞ்ச நஞ்சம் வந்து கொண்டிருந்த கூட்டமும் குறைந்து தியேட்டரில் காற்றாடிக்கொண்டிருந்தது!

மறு நாள் பத்திரிகையைப் பார்த்த சுந்தரத்திற்குத் தூக்கி வாரிப் போட்டது. 'துரைதானா இந்த விமர்சனத்தை எழுதியது?' என்று அவருக்கே சந்தேகம் வந்து விட்டது.

'துரோகி. இந்தப் படத்தால் நான் பணக்காரன் ஆகிவிடக் கூடாது என்று நினைத்திருப்பானோ? இல்லாவிட்டால் இப்படி இல்லாதது பொல்லாததுகளையெல்லாம் எழுதி, வயசுப் பெண்கள் பார்க்கக் கூடாத படம் என்று எழுதியிருப்பானா? அவனை உடனே பார்த்து நாலு அறை அறைய வேண்டும். அப்போதுதான் ஆத்திரம் தீரும்' என்ற எண்ணத்துடன் எழுந்தார்.

''என்னங்க! உங்க பிரண்டு துரை நல்லவரு நல்லவருன்னு அவரு பின்னாலே சுத்தி வீங்களே! பார்த்தீங்களா அவர் விமர்சனத்தை! நம்ம படத்தில ரெட்டை அர்த்தமுன்ன வசனமா வருதாமே! கதாநாயகியோட கவர்ச்சி அளவுக்கு மீறித் தெரியுதாமே? என்ன கொழுப்பிருந்தா இப்படி எழுதுவார்? கெட்ட கேட்டுக்கு விருந்து வேறே! நாக்கைப் பிடுங்கிக்கிற மாதிரி நாலு வார்த்தை கேட்டுட்டு வாங்க!'' என்று புது மினகாயாய் எரிந்து விழுந்தாள் அவர் மனைவி பார்வதம்.

''நாலு வார்த்தை என்ன? நாலு அறையே கொடுத்திட்டு வரேன்!'' என்று புறப்பட்டவரை எதிர்கொண்டார் புரொடக்ஷன் மானேஜர்.

''சார்! நம்ம படத்தை எவனோ 'செக்ஸ் இருக்கு; வயசுப் பொண்ணுங்க பார்க்கக் கூடாது'ன்னு பத்திரிகையில எழுதிட்டானும். அதுனால பயங்கரக் கூட்டம். காலேஜ் பொண்ணுங்க கூட கட் அடிச்சிட்டு வந்துட்டாங்களாம். பையன்க கூட்டம் வேற. டவுன்லே ஒகோன்னு பேசிக்கிறாங்க சார்! எங்கே பார்த்தாலும் நம்ம படத்தைப் பத்தித்தான் பேச்சு. இனி கவலையே வேண்டாம். நிச்சயம் வெள்ளி விழாக் கொண்டாடும் சார் நம்ப படம்!'' என்று குதூகலத்தில் குதித்தார் புரொடக்ஷன் மானேஜர்.

''என்னங்க இது?'' என்று கேட்டாள் பார்வதம்.

''இதுதாண்டி உலகம். நல்லதுன்னுப் பார்க்க மாட்டாங்க. கெட்டதுன்னு பார்க்க வருவாங்க. துரை சைகாலஜி படிச்சவன் இல்லையா?'' என்று பாராட்டினார் சுந்தரம்!

# வார்த்தையில் ஒரு பரதம்

'பரதம்' என்ற சொல்லில் 'ர' என்ற எழுத்தை எடுத்து விட்டால் 'பதம்' என்றாகிறது. பதம் இல்லையேல் நடனம் இல்லை. 'ர' என்ற எழுத்தினுள்ள நீட்டலை எடுத்து விட்டால் 'பாதம்' என்றாகிறது. இது நடனத்துக்கே உயிர்.

'ப'வை எடுத்து விட்டால் 'ரதம்' ஆகிறது. நடனமாடும் பெண்கள் ரதம் போல் அலங்கரித்துக் கொண்டால்தான் நடனம் சோபிக்கும். முன்னால் உள்ள இரு எழுத்துக்களையும் எடுத்துவிட்டால் மிஞ்சுவது 'தம்'. இது இல்லாவிட்டால் நடனமே ஆட முடியாது!

—கலைஞர் மு. கருணாநிதி

தகவல்: த. சத்தியநாராயணன்



# பெண்கள் சேலை உடுத்திக்கொள்ளக் கூடாதாமே?

'டாஸி'ல தாய்க்குலத்திற்கு வெற்றி கிட்டவே, முதல் கேள்விக்கணையைத்தொடுத்தார்கள் மதுரை பாத்திமா கல்லூரி மாணவிகளான ஆர். கிறிஸ்டினு அமலோற்பவமும் ஆர். சகாயராணியும்.

கணையை எதிர்கொண்டவர்கள் மதுரை சௌராஷ்ட்ரா கல்லூரி மாணவர்கள் கே. கே. வினோத், ஏ. கே. சுப்பிரமணியம். இந்த 'க்விஸ்'ஸில் கேட்கப்பட்ட கேள்விகள்:

1. சமீபத்தில் ஒரு தீவுக் கூட்டத்திற்கு ஹெலிகாப்டர் பிரயாணிகள் சர்வீஸ் துவங்கியது - எந்த இடத்திலிருந்து துவங்கியது? எந்தத் தீவுக் கூட்டத்திற்கு?
2. சூபர்சானிக் (Supersonic) என்ற வார்த்தையின் பொருள் என்ன?
3. இந்தியாவின் முதலாவது தலைமை நீதிபதி யார்?
4. பட்டு நூல்காரர்கள் என்று எந்த சமூகத்தைக் குறிப்பிடுகிறார்கள்? அவர்கள் எங்கிருந்து வந்தவர்கள்?
5. மிக இளம் வயதிலேயே டெஸ்ட் கிரிக்கெட்டில் நுழைந்தவர் யார்?
6. எந்த நாட்டில் அலுவலகங்களில் வேலை செய்யும் பெண்கள் சேலை உடுத்திக் கொள்ளக் கூடாது என்ற சட்டம் இருக்கிறது?
7. ஐவகை நிலங்கள் எவை? குறிஞ்சி நிலம் எதைக் குறிக்கிறது?
8. முதன்மந்திரி பதவி ஏற்ற பின் தேர்தலில் நின்று வெற்றி பெற்ற தமிழ்நாட்டு முதல்வர் யார்?
9. செயற்கைக் கோள் அனுப்பிய முதல் ஆசிய நாடு எது?
10. இந்தியாவில் ஜனாதிபதி ஆட்சி ஒரு மாநிலத்தில் எவ்வளவு காலத்துக்கு நீடிக்கலாம்?

## பொது அறிவுப் பக்கங்கள்

11. 1982-ம் ஆண்டின் சிறந்த நடிகையாகத் தேர்ந்தெடுக்கப்பட்டவர் யார்?
12. தமிழ்நாட்டில் ஒரே ஒரு ஊரில் மட்டும் கள், சாராயக் கடைகள் கிடையாது. அது எந்த ஊர்?

பெரும்பான்மை கேள்விகளுக்குப் பதில் சொல்லி ரூ. 30 பரிசைத் தட்டிக் கொண்டு போனார்கள் பாத்திமா கல்லூரி மாணவிகள், கலந்துகொண்ட



நால்வருக்கும் புத்தகங்களும் பரிசாக வழங்கப்பட்டன.

இனி பதில்களைப் பார்ப்போமா?

1. கொச்சியிலிருந்து லட்சத்திவு கூட்டங்களுக்கு ஹெலிகாப்டர் சர்வீஸ் துவங்கியது.

2. 'ஒலியை விட வேகமாகச் செல்வது' என்ற பொருளைக் குறிக்கிறது 'Supersonic என்ற வார்த்தை!

3. ஜஸ்டிஸ் எஸ். ஜே. கானியா.

4. சௌராஷ்ட்ரா சமூகத்தைச் சேர்ந்தவர்களே. இவர்கள் குஜராத்திலிருந்து வந்தவர்கள்.

5. பாகிஸ்தானைச் சேர்ந்த முஷ்டாக் முகமது 15 வயதிலேயே டெஸ்ட் கிரிக்கெட்டில் நுழைந்து விட்டார்.

6. பாகிஸ்தானில்.

7. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, மலையையும் மலையைச் சார்ந்த இடங்களையும் குறிப்பது குறிஞ்சிநிலம்.

8. அமரர் காமராஜர்.

9. 1970 பிப்ரவரி 11-ம் தேதி அன்று செயற்கைக் கோளை அனுப்பியது ஜப்பான்.

10. ஒரு வருடம்.

11. ஷபனா ஆஸ்மி.

12. அமரர் ராஜாஜி அவர்கள் பிறந்த தொரப்பள்ளி என்ற ஊர்.

நன்றி:— இந்த 'க்விஸ்' நடப்பதற்கு உதவியாக இருந்த மதுரை திசைமுத்து அவர்களுக்கு.

தொகுப்பு: ப்ரியன், சந்திரமௌலி

படங்கள்: வி. மனோ

# புள்ளிகள் கையெழுத்து போட்டி — முடிவு

சரியான விடைகள்:

1. ஸ்ரீபால்
2. பட்டுக்கோட்டை பிரபாகர்
3. உசிலைமணி
4. துரைமுருகன்
5. சௌந்தரா கைலாசம்

இடது கையால் தங்கள் பெயர்களை எழுதியவர்கள் மேற்சொன்ன ஐந்து பேர்களே என்பதைச் சரியாக எழுதி ரூ. 250 பரிசுத் தொகையைச் சமமாகப் பகிர்ந்து கொள்கிறவர்கள் எட்டு வாசகர்கள்:

1. ஜோ. பெலிக்ஸ்,
S/o கே. ஜோஸப்,
நடுத் தெரு, மைக்கேல்பட்டி
தஞ்சாவூர் மா. வ.

2. ஆ. முருக சுவாமிநாதன்
46, தெற்குத் தெரு,
அம்பாசமுத்திரம்,
627-401.

3. திலீவரசன்,
நங்கநல்லூர் அஞ்சலகம்,
சென்னை-600-061.

4. ஆர். காயத்ரி
டி-79, திருவேங்கடநகர் காலனி,
அம்பத்தூர், சென்னை-600-053.

5. கே. ராமசாமி
அம்மன் தெரு, தண்டலை,
ஜெயங்கொண்டம் வட்டம்
திருச்சி மா. வ. 621-803.

6. க. குமார்,
1/147, சாலை வீதி,
மானாம்பதி, 603-403.

7. ஜி. ஆர். மணி பிரசாத்,
36, 4வது மெயின் ரோடு,
ராஜா அண்ணாமலைபுரம்,
சென்னை-600-028

8. கணேஷ்குமார்,
21, ஆதிப்பிரான் தொட்டி தெரு
திருச்சி-8.

● ஆனந்தியின் எழுத்தில் தெளிவாக வரும் சிக்கலில் ஹநுமான் காயத்ரீ ''கபிராஜாய'' என்று தொடங்க வேண்டும்; ''கவிராஜாய' அல்ல. கபி என்றால் குரங்கு.

சென்னை-53 ரா. கணபதி

● உம் வீட்டில் உம் மனைவிதான் சமைக்கிறார் என்பதை நாங்கள் ஒப்புக்கொள்கிறோம். அதற்காக அது தொடர்பான ஒரே ஜோக்கை இரண்டு பக்கங்களில் போட்டுக் காட்ட வேண்டுமா?

மதுரை நாகு வேலன்

[தவறு, 26-6-83 இதழ் அச்சாகிக் கொண்டிருக்கும் போதே கவனித்துத் திருத்தப்பட்டது. -ஆர்]

● கல்கி 12-6-83 'இதழில் சிதம்பர ரகசியம்' என்ற கட்டுரையில் இங்கு உள்ள நீதி மன்றத்தில் முத்திரைத் தாள் விற்பனையாளர் இல்லாதது குறை என்று காணப்படுகிறது. மேற்படி நீதிமன்றத்தில் முத்திரைத் தாள் விற்பனையாளராக நான் 24-2-78 முதல் இன்றுவரை தொடர்ந்து பணியாற்றி வருகிறேன்.

சிதம்பரம் எஸ். கோவிந்தராசன்

● 'எந்தரோ மகானுபாவுலு' நாடக விமர்சனம் படித்தேன். நாடகத்தைப் பொறுத்த வரை தங்கள் கண்ணோட்டம் சரிதான். ஆனால் 'கேதாரின்' கதை என்னவோ செயற்கையாக, ஜீவனில்லாமல் இருந்தது போலவும், அதற்கு நாடகக்காரர்கள்தான் கண், மூக்கு, வைத்து உயிர்ப் பிச்சை கொடுத்தது போலவும் எழுதியிருப்பது மிகவும் வருந்தத் தக்கது.

செயற்கை'யான, 'ஜீவனில்லாத' கதையாக இருப்பின் ஆனந்த விகடன் அட்டைப் படச் சிறப்புக் கதையாக அதனைப் பிரசுரித்திருக்குமா?

சென்னை ஜி. லோகநாதன்

● ஸ்ரீமதி டி. ருக்மிணியின் வண்ணப் படமும் கட்டுரையும் பார்த்து மகிழ்ந்தேன். அவர் மாமனார் டாக்டர் எம். டி. அனந்தாச்சாரி இன்று உயிருடன் இருந்தால் இதைக் கண்டு எவ்வளவு சந்தோஷப்பட்டிருப்பார் என்று எண்ணிப் பார்க்கிறேன். மதுரை மருத்துவக் கல்லூரியின் முதல்வராக விளங்கிய அவர் ருக்மிணியை மருமகளாகத் தேர்ந்தெடுத்ததே இசை ஆற்றலுக்காகத்தான்! அவரும் அவர் மனைவி சுபத்ராவும் ருக்மிணியைச் சொந்த மகளே போல் நடத்தி இசை உலகில் முன்னேற ஊக்கமும் உற்சாகமும் அளித்து வந்தனர்.

சென்னை-17 வி. வி. அங்குலி



# வட்ட மேஜை

● சவீதாவின் மாஸ்டர்பீஸ் நிச்சயமாக 'நேசமுள்ள வான்கடரே' தான். வார்த்தைகளைக் கொச்சைப் படுத்தாமல் மிகவும் கண்ணியமான முறையில் உள்ளத்தைத் தொடுமாறு எழுதி வருகிறார்.

சின்ன சேலம் கோ. பாபு

● பாரத நாட்டுக் குபேரனைப் பற்றிய மகத்துவத்தைத் தலையங்கத்தில் அழகாகச் சொன்னதுடன், நாட்டையே 'குபேர பட்டிணமாக்கும்' அரிய பொருளாதாரத் தத்துவத்தையும் ரத்தினச் சுருக்கமாகச் சொல்லி விட்டீர்கள்.

ஸ்ரீரங்கம் ஆர். கோபாலன்

● புஷ்பா தங்கதுரையின் ''இங்கிலீஷ் படம் நிறையப் பார்த்தவன்'' மர்ம நாவல் விறுவிறுப்பாகவும் சற்று வித்தியாசமாகவும் இருந்தது. ஒரே மூச்சில் நாவலைப் படித்து முடித்து விட்டேன்.

மே. மாம்பலம் எஸ். மோகன்

● இன்ஸ்பெக்டர் ஜேம்ஸ் என்னிடம் சொன்னார்: 'புஷ்பா தங்கதுரை இது போன்ற அறுவையான நாவலை இதுவரை எழுதியதில்லை!'

திருவையாறு வெ. நரசிம்மன்

● 'கிருஷ்ணா நதி நீர்த் திட்டம் கைவிடப் பட்டதேன்?' என்று சால்ஜாப்பு சொல்லாமல் இருந்தால் அதுவே தமிழர்களுக்குச் செய்யும் பெரும் தொண்டு.

சென்னை-57 இரணியல் 'கலை'

## விகடன் சிறப்பித்த கதையிலா ஜீவனில்லை?

## 13

### 'இவனை நேசிக்க எனக்கு ஆயிரம் இதயங்கள் வேண்டும்'

மூன்றிரவில் விடுதியறைக்குள்ளே பத்மா ஒருவிதக் குற்ற உணர்வுடன் கால் வைத்த போது மணி எட்டே முக்கால்.

டெய்சி படுக்கையில் கால் நீட்டி மேஜை விளக்கின் வெளிச்சத்தில் ஒழுங்காகப் படித்துக் கொண்டிருந்தாள்.

பத்மா தனியாக விடுதியை விட்டு வெளியே போனதுமில்லை; அவ்வளவு தாமதமாக அறைக்குத் திரும்பியதுமில்லை. எனவே, கூந்தலில் பூக்குவியலுடன் அறைக்குள்ளே பிரவேசித்த பத்மாவைப் பார்த்ததும் டெய்சிக்கு ஒரே ஆச்சரியம். "எங்கேடீ போயிருந்தே? கூப்பிட்டிருந்தா நானும் வந்திருக்க மாட்டேனா?"

பத்மா பதில் சொல்லாமல் பாலிதீன் பேப்பரில் இருந்த முந்திரிப் பருப்பை அவளிடம் நீட்டினாள். "ஒரு வெடிங் ரிஸப்ஷனுக்குப் போயிருந்தேன்."

"என்கிட்டே சொல்லவே இல்லையே. நானும் வந்திருவேன்னு பயமா?"

"எனக்கே டிஉர்னுதான் தெரியும்."

"யாருக்கு மாரேஜ்?"

'விடமாட்டாளே'என்று மனத்தில் சொல்லிக்கொண்ட பத்மா, "அது ராமுக்குத்தான் தெரியும்" என்றாள் அமைதியாக. மத்தியானம் கட்டியிருந்த புடவையைக் கொடியிலிருந்து உருவினாள்.

"அப்படி விஷயத்தைச் சொல்லேன், ராமோட போயிருந்தியா?"

"ஆமா, அவரோட அப்பா, அம்மாவெல்லாம் வந்திருந்தாங்க."

"சரிசரி, இப்பப் புரிஞ்சுக்கிட்டேன்."

"என்னடி புரிஞ்சுக்கிட்டே?"

"திருமணங்கள் வெடிங் ரிஸப்ஷனில் நிச்சயிக்கப்படுகின்றன!"

"ச்சீ, நீயா எதையாவது கற்பனை பண்ணிக்காதே. அவருக்கும் எனக்கும் ஏணி வெச்சாலும் எட்டுமா?"

"அதான் பெரிய ஏணியா சாத்திட்டியே. ஏன்டி மனசுக்குள்ளே வாரி வாரியா ஆசைகளை வெச்சுக்கிட்டு என்கிட்டே மறைக்கிறே?"

"நீ நினைக்கிற மாதிரி எனக்கு ஆசைகள் எதுவும் இல்லே, டெய்சி! ராம் என் மனசிலே நிறைஞ்சிருக்கார். அவரைப் பத்திய நினைவுகள் நான் எங்கே போனாலும் என்னோடயே வரும். அதுக்கு மேலே எனக்கு எதுவுமே வேண்டியதில்லே."

"நேரிடையாகவே கேட்டுர்றேன். ராம் உன்னைக் கட்டிக்கிறேன்னு உன்கிட்ட வந்து சொன்னா 'உங்களுக்கும் எனக்கும் ஏணி வெச்சாலும் எட்டாது'ன்னுமறுத்திருவியா?"

பத்மா பேசாமலிருந்தாள்.

"ஏன்டி என்கிட்டச் சொல்லப் பயப்படறே? உனக்கும் ராமுக்கும் இடையிலே நான் வில்லியா முளைச்சிருவேன்னு பயப்படறியா?"



"வில்லியா வந்தாப் பயப்பட மாட்டேன்."

"அப்புறம்?"

"ஸெகண்ட் ஹீரோயினா வந்தாத்தான் பயப்படுவேன்" என்றாள் புன்னகையுடன்.

"ராம் வாழ்க்கையிலே ஸெகண்ட் ஹீரோயினுக்கே இடமில்லே."

"எப்படிச் சொல்றே?"

"பத்மா பத்மான்னு ராத்திரியும் பகலும் அவர் உயிரையே விட்டுக்கிட்டிருக்காராம்."

"ஏன்டி பொய்யெல்லாம் சொல்றே?"

"இன்டலுக்காகச் சொல்றேன்னு நினைக்கிறியா? என் தலைமேல அடிக்கச் சத்தியமாச் சொல்றேன். ராம் உன்னைப் பத்தி நினைக்

காத, பேசாத நேரமே இல்லேன்னு சுப்பையா சொன்னார்.''

''சுப்பையாவா?''

''ஆமா. உனக்கு நான் கிடைச்ச மாதிரி அவருக்குச் சுப்பையா. இன்னிக்கு சாயந்திரம் முழுக்க ராமையும் உன்னையும் பத்தித் தான் பேசினார்... யு ஆர் ரியலி கிரேட் பத்மா. நீ அம்மா அப்பா இல்லாம வளர்ந்து டாக்டருக்குப் படிக்கிறதுகூடப் பெரிய சாதனை இல்லே. ராமோட மனசில இடம் பிடிச்சதுதான் பெரிய அச்சீவ்மெண்ட்''.

''போயும் போயும் அவர் என்னை ஏன் விரும்பறார்னு எனக்குக் கூட இன்னும் புரியலே டெய்சி.''

''அப்படி உன்னைப் பத்தி ஒரேயடியா தாழ்வா நினைச்சிராதே. நீ அவருக்கு ஏத்தவ தான். அவர் விரும்பற குணாதிசயங்கள் உன்கிட்டே இல்லேன்னா அவர் உனக்காக உயிரை விடுவாரா?''

டெய்சி கவரைக் கிழித்து முந்திரிப் பருப்பை அள்ளித் தன் வாயில் ஒன்றைப் போட்டுக் கொண்டு ஜாக்கெட் மாற்றிக் கொண்டிருந்த பத்மாவின் . இதழ்களுக் கிடையே ஒன்றை ஊட்டினாள்.

அன்று பத்மாவின் மனம் படிப்பை நாட வில்லை. மனத்தில் பரபரப்பு, ஏக்க உணர்வு. உடலில் அசதி.

படுக்கையில் சாய்ந்தாள். டெய்சியும் புத்தகத்தை மூடி வைத்துவிட்டு விளக்கை அணைத்தாள். இருளில் இருவரும் பேசிக்கொண்டிருந்தனர். அரை மணி நேரத்துக்குப் பிறகு பத்மா ஏதோ கேட்டாள். டெய்சியிடமிருந்து குறட்டையொலி பதிலாக வந்தது.

பத்மா இருளில் தன் கரத்தை எடுத்துத் திரும்பத் திரும்ப முகர்ந்து ராமின் நறுமணத்தை உணர்ந்தாள். காரில் அவனருகே அமர்ந்து வந்ததால், அவனுடைய செண்ட்டின் நறுமணம் தன் கரத்திலும் படிந்திருக்கிறது என்ற மூட நம்பிக்கை அவளுக்கு. அவனுடைய மணம் தன்னையே சூழ்ந்து கொண்டிருந்ததைப் போன்ற பிரமையில் திளைத்தாள்.

ராம் சம்பந்தப்பட்ட எல்லாமே எனக்கு ஏற்றவைகளாக இருக்கின்றன. அவன் வகுப்பறையில் கம்பீரமாகச் சாய்ந்து பாடம் கேட்கும் விதத்தை நான் விரும்புகிறேன். அவன் பேசும்போது அவனுடைய கரங்கள் காற்றில் அலைந்து அவனுடைய எண்ணங்களுக்கு வடிவம் தருவதைச் சுய நினைவை இழந்து ரசிக்கிறேன். அவன் விரும்பும் சகல விஷயங்களையும் நபர்களையும் நானும் விரும்புகிறேன். அவன் பாதம் பட்ட பூமியை நான் வணங்க ஆசைப்படுகிறேன்.

பணமிருந்த போதிலும் பாடங்களில் கவனம் செலுத்தி எனக்கு அடுத்தபடியாக அதிக மதிப்பெண்களைப் பெறுகிறான். தமிழிலும் ஆங்கிலத்திலும் புதுக் கவிதை அழகாக எழுதுகிறான். விளையாட்டுப் போட்டிகளுக்குச் சென்று வெற்றிக் கோப்பைகளையும் கேடயங்களையும் கல்லூரிக்குப் பெற்றுத் தருகிறான். அயல்நாட்டுத் தூதரகம் நடத்திய பட விழாவில் ஃபாஸ்பைண்டரின் படங்களைப் பற்றி விவாதிக்கிறான். நெற்றியில் நீறு துலங்க 'ஸ்டெத்'துடன் காலையில் வார்டுக்கு வருகிறான். இறைவா! இவனை நேசிக்க எனக்கு ஆயிரம் இதயங்கள் வேண்டும்.

கடற்கரைப் பங்களாவில் ராமுடன் விருந்து சாப்பிட்டதையும் அப்போது பேசியவைகளையும் பத்மா நேரம் கிடைத்த போதெல்லாம் நினைத்துப் பார்ப்பாள்.

நாலாவது ஆண்டின் ஆரம்பத்தில் பத்மாவையும் டெய்சியையும் இரண்டாவது மாடியின் நடுவில் இருந்த அறைக்கு மாற்றினார்கள். பழைய அறையை விட அது விசாலமானதாக இருந்தது.

ஆப்தல்மாலஜி ஓ. பி.யில் பேராசிரியர் ஒரு கண் நோயாளியை உட்கார வைத்து அவன் கண்களில் டார்ச் அடித்து மாணவர்களுக்கு விவரித்தார். மாணவ மாணவிகள் நெருக்கியடித்துக் கொண்டு ஒருவர் முதுகின் மேல் ஒருவர் படுத்துக் கொண்டு அவனுடைய கண்ணைப் பார்த்தனர். பத்மாவால் அவர்களுடன் போட்டி போட முடியவில்லை. விலகி நின்றாள்.

கும்பல் கலைந்ததும் ராம் அந்த நோயாளியைத் தனியாக அழைத்து அவன் கண்ணில் டார்ச் அடித்து 'காட்டராக்ட்' பற்றிப் பத்மாவுக்கு விளக்கிச் சொன்னான். நோயாளியிடம் ஐந்து ரூபாய் கொடுத்தான்.

இறுதியாண்டில் கைனகாலஜி. லேபர் வார்டுக்குள் கும்பலாக நுழைந்தனர். ஏறத்தாழ முப்பது மேஜைகளில் கர்ப்பிணிகள் பாவாடை ஜாக்கெட் அணிந்து ''ஸ் ஆ!'' என்று வேதனைமுனகலை எழுப்பிக்கொண்டும், ''ஐயோ அம்மா!'' என்று அலறிக்கொண்டும் இருந்தனர். பச்சைப் பார்டருள்ள வெள்ளைப் புடவை அணிந்த . ஆயாக்கள் அங்குமிங்கும் சுழன்றனர்.

எந்த வலியும் இல்லாமல் தாயின் வயிறு திடீரென்று பிளந்து குழந்தை வெளியே வரும் என்று பத்மா விவரம் தெரியாத சின்ன வயசில் நினைத்துக் கொண்டிருந்தாள்.



''நம் தலைவர் எடைக்கு எடை நாணயம் வாங்கறப்போ தன்னோட அல்ப புத்தியைக் காட்டிட்டார்.''

''என்ன செய்தார்?''

''தராசில் ஏறுவதற்கு முன்னாலே மிலிட்டரி ஹோட்டலில் சாப்பிட்டுட்டுத் தான் வருவேன்னுட்டார்.''

—மிழை அ. கதிர்வேல்

# இதோ ஒரு முக்கிய அறிவிப்பு!

## யூனிட் ட்ரஸ்டின் சிறப்பு ஜூலை விற்பனை. வருடத்தின் மிகக்குறைந்த விலையில்— யூனிட் ரூ. 12.25 மட்டுமே.





யூனிட்டுக்களில் செய்யும் முதலீடு உங்களுக்கு அதிக வருமானத்தைத் தருகிறது. இது மட்டுமா! யூனிட்டுக்களின் பிரத்யேக பயன்களான பாதுகாப்பு, எளிதில் பணமாக்கும் வசதி மற்றும் வரிச்சலுகைகளும் கிடைக்கின்றன. இந்த வாய்ப்பினை நழுவ விடாதீர்கள்.

விரைவில் எதிர்பாருங்கள் எங்கள் டிவிடெண்ட் விளம்பரத்தை! உங்களுக்கு ஒரு நற்செய்தி காத்திருக்கிறது.

விவரங்களுக்கு அரசுடைமையாக்கப்பட்ட வங்கிகள், தலைமை தபால் நிலையங்கள் மற்றும் எங்களது தலைமை பிரதிநிதிகள் அல்லது ஏஜெண்டுகளை அணுகுங்கள்.





**யூனிட் ட்ரஸ்ட் ஆப் இந்தியா**

தலைமை அலுவலகம்: பம்பாய்.
(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

பிராந்திய செயலகம்:
ரெஜினா மான்ஷன்,
46 செகண்ட் லைன் பீச்
சென்னை-600 001. போன்: 27433

Sista's UTI 124 83 TMA

## உங்கள் சேமிப்பின் தொடக்கம் யூனிட்டுகளாக இருக்கட்டும்.

---

எங்கள் முக்கிய பிரதிநிதிகள்:

திரு. ஏ. தனபால், 10-ஜே ஹுசைனர் ரோடு, கோவை-641 018, போன்: 34776
திரு. எம். ராமமூர்த்தி, 30 எல்.ஐ.சி. காலனி, மதுரை-625 002, போன்: 30160
திரு. கே. முத்துசாமி, 52-ஏ வ.உ.சி. நகர், தஞ்சாவூர்-613 907, போன்: வீடு 1224
திரு. என். கே. இங்கர்சால், 155, சவுர்ணம்பிகை தெரு, அன்னதானப்பட்டி, சேலம்-636 002 போன்: 64302 P.P.
திரு. எம். எம். காஜா, பக்காளி பில்டிங் அனெக்ஸ் 41-பி, திருவனந்தபுரம் நெடுஞ்சாலை,
பாளையங்கோட்டை-627 002 போன்: 4520, வீடு 5395

நிஜமான பிரசவத்தை நேரில் பார்த்த போது நானும் ஒரு நாள் இப்படித்தானே அவஸ்தைப்படுவேன் என்று மனசினுள் ரகசியமாகப் பயந்தாள்.

ஒரு ஹவுஸ் சர்ஜன் ஸ்டூல் போட்டு உட்கார்ந்து ஏற்கனவே டெலிவரி ஆன எபிஸியாடமி கேஸிற்குத் தையல் போட்டுக் கொண்டிருந்தாள். பத்மா அதைப் போய்ப் பார்த்தபோது, அவர் பக்கத்துப் படுக்கையில் இருந்த கர்ப்பிணிப் பெண்ணைப் பத்மாவிடம் காட்டி, "இந்த கேசுக்கு ஹெட் தெரியுது. மேடத்துக்கிட்ட சீக்கிரம் போய்ச் சொல்லுங்க" என்றார்.

மாணவ மாணவிகள் புடைசூழ வார்டுக்குள் நடந்து கொண்டிருந்த பேராசிரியையிடம் போய்ப் பத்மா விஷயத்தைச் சொன்னாள்.

உடனே அவர், "வா, நீயே டெலிவரி பாரு" என்று பத்மாவின் கையைப் பற்றிக் கொண்டார். "எந்த பெட்?" என்று கேட்டார்.

மற்ற கணம் இறுதியாண்டு மாணவ மாணவிகள் ஏழுபேரும் அந்தப் படுக்கையைச் சூழ்ந்து கொண்டனர். பி. ஜி. மாணவர்கள் இரண்டு பேரும் ஹவுஸ் ஸர்ஜன்கள் மூன்று பேரும் ஒரு ஆயாவும் இரண்டு நர்ஸ்களும் அந்தக் கும்பலில் சேர்ந்து கொண்டனர்.

பேராசிரியை பத்மாவின் கரங்களுக்குக் கிளவ்ஸ் அணிவித்தார். மூக்கையும் வாயையும் மறைக்கிற மாதிரி முகத்துக்கு மாஸ்க் கட்டி, உடம்பை மறைக்க ஏப்ரன் போல பிளாஸ்டிக் ஷீட்டை கழுத்திலிருந்து கட்டித் தொங்க விட்டார்.

பத்துப் பதினைந்து பேருக்கு மத்தியில் வைத்து அப்படிச் செய்தது பத்மாவுக்குப் பயத்தையும் படபடப்பையும் ஏற்படுத்தியது.

---

அட்டையில்....

பெயர்: கப்புலட்சுமி. சொந்த ஊர்: சிங்கப்பூர். தற்சமயம் தங்கியிருப்பது சென்னையில். இவர் தேர்ச்சி பெற்றிருப்பது மாடலிங்கில் மட்டுமில்லை; சீன மொழியிலும் கூடத்தான். (சந்தேகம் இருப்பவர்கள் கப்புலட்சுமியுடன் சீன மொழியில் உரையாடிப் பார்க்கலாம்!) மாடலிங்கிற்கு வாய்ப்புத் தேடுவதோடு சினிமாவில் நடிக்கவும் சந்தர்ப்பத்தை எதிர்நோக்கியிருக்கிறார் இவர்!

வண்ணப்படம் : ஏ. வி. பாஸ்கர்




ஒரு குழந்தையை நான் இந்த உலகத்துக்குக் கொண்டு வரப் போகிறேனா! உயிர்த் துடிப்போடு அது வெளியே வருமா? நான் தவறாக ஏதாவது செய்து குழந்தைக்கு ஏதாவது ஆகிவிட்டால்?

ராம் பார்வையால் தைரியமூட்டினான். படுத்திருந்த கர்ப்பிணி தலையை இப்படியும் அப்படியுமாகப் புரட்டிக் கொண்டு வேதனையைத் தாங்க முடியாமல் பக்கத்தில் நின்ற ராமின் கரத்தைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

சாம்பல் நிறத்தில் வெளிப்பட்ட தலையைப் பேராசிரியை அனைவருக்கும் காண்பித்து, "இதுதான் வெர்டெக்ஸ் ப்ரஸென்டேஷன். நார்மல் டெலிவரி. இதுக்கு ஃபோர்ஸெப்ஸ் தேவையில்லே. இது ப்ரைமி இல்லே. அதனாலே எபிஸியாடமி தேவையில்லே...."

இரண்டு ஆயாக்கள் பெண்ணின் தொடைகளை இறுக்கமாகப் பிடித்துக் கொள்ள, நர்ஸ் நெஞ்சுக்கும் வயிற்றுக்குமிடையே கரத்தைப் பதித்து அழுத்த, பத்மா புதுக் குழந்தையின் பிடரிப் பக்கம் கரத்தைச் செலுத்தி இழுத்தாள். குழந்தை சிரமம் தராமல் 'வழுவழு'வென்று வெளியே வந்தது. பத்மாவின் மேல் 'ஆம்னியாடிக் ஃப்ளூயிட்' வெள்ளையாகத் தெறித்தது. குழந்தையின் கால்களைப் பிடித்துத் தலை கீழாகத் தூக்கினாள்.

பேராசிரியை பிரசவத்தின் மூன்று கட்டங்களையும் விவரித்து முடிக்க, நஞ்சுக் கொடியில் கிளிப் மாட்டப்பட்டுக் கத்தரிக்கப்பட்டது. தாயின் உடலிலிருந்து பிரிக்கப்பட்டதும் சுதந்திரமாக அந்தக் குருத்து சுவாசிக்கத் தொடங்கியது. மகிழ்ச்சியால் பத்மாவுக்கு மூச்சுத் திணறியது.

ராம், "கங்க்ராட்ஸ்" என்றான். நர்ஸ் 151 என்ற எண்ணுள்ள இரண்டு டோக்கன்களைக் கொண்டு வந்து ஒன்றைத் தாயின் கரத்திலும் இன்னொன்றைக் குழந்தையின் கரத்திலும் கட்டினாள். கப்பையா சாக்பீஸுடன் வராந்தாவுக்கு ஓடினான். போர்டில் 'அனுசூயா, ஆண்குழந்தை. தாயும் சேயும் நலம்' என்று எழுதிவிட்டு அனுசூயாவின் உறவினர்களுக்கிடையே சிக்கிக் கொண்டான்.

அன்றிரவு பத்மா அறைக்குத் திரும்பியதும், பெட்டியைத் திறந்து கீழே இருந்த ப்ரௌன் ஆபீஸ் கவருக்குள்ளிருந்து ஒரு மணிபர்ஸை எடுத்தாள்.

அப்பாவைப் பார்க்க வேண்டும் அல்லது அவரிடம் ஏதாவது பேச வேண்டும் போல இருந்தால் பத்மா அந்தப் பழைய தோல் மணி பர்ஸை எடுப்பாள். அது அப்பா உபயோகித்தது. அதற்குள்ளிருந்து நாணயங்களை உள்ளங் கையில் கொட்டினாள். அந்த நாலணா, எட்டணா, ஒரு ரூபாய் நாணயங்கள் அப்பா அவளுக்காகக் கடைசியில் விட்டு விட்டுச் சென்றவை.

முதல் பிரசவம் பார்த்த அன்று அப்பாவிடம் அதைச் சொல்ல வேண்டும் போலத் தோன்றவே அந்த நாணயங்களையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் விழிகளில் இருந்து வழிந்த கண்ணீர் நாணயங்களின் மீது சொட்டுச் சொட்டாக அமர்ந்தன.

(தொடரும்)



○ பிரம்பனான் சிவன்கோவில்

# ஜாவாவில் ராமாயணம்

மத்திய ஜாவாவில் ஒரு மலைச் சாரல் கிராமம். பெயர் ஜோங்க்ராங். பிரம்பனான் என்றும் அழைக்கின்றனர்.

நிலாக் கால முன்னிரவு நேரம்., உயரமான ஒரு கோவில்; அதையொட்டி ஆறு சலசலத்து ஓடிக் கொண்டிருக்கிறது. அந்தக் கிராம மக்களும் சுற்றுப்புற சிற்றூர் வாசிகளும் சில வெளி நாட்டுச் சுற்றுலாப் பயணிகளும் அங்கு வந்து திரள்கிறார்கள்.

ராமாயண நாட்டிய நாடகம் பார்ப்பதற்காகவே அந்தக் கூட்டம்.

ஆண்டு தோறும் மே மாதத்திலிருந்து அக்டோபர் வரை முழு நிலாக் கால இரவுகளில் பிரம்பனான் கிராமத்தில் இந்த விழா நடைபெற்றுக்கொண்டிருக்கிறது. நான்கு இரவுகளில் நான்கு பகுதிகளாக ராமாயண நாட்டிய நாடகம் நடத்தப் படுகிறது.

கோவிலையொட்டி நாடக மேடை அமைக்கப் பட்டிருக்கிறது. அது சிவன்கோவில். ஒன்பதாம் நூற்றாண்டில் கட்டப்பட்டது. கோவில் சுவர் முழுதும் ராம கதையைச் சித்திரிக்கும் காட்சிகள் சிற்பங்களாக வடிக்கப் பட்டிருக்கின்றன.

இந்த நாட்டிய நாடகத்தில் சுமார் 150 கலைஞர்கள் கலந்து கொள்கிறார்கள். பிரம்பனான், பக்கத்து நகரங்களான சூலோ, ஜோக், ஜாகர்த்தா ஆகியவற்றைச் சேர்ந்த இளைஞர்களும் சிறுவர்களுமே நடிகர்கள்,

கடந்த பல வருடங்களாக இந்தோனேஷியாவின் முன்னாள் சுற்றுலா அமைச்சர் மேஜர் ஜாதி குகமோ ராமாயண நாட்டிய நாடகத்தைத் தயாரித்து அளித்து வருகிறார். மே மாதம் ஆரம்பமாகும் இந்த விழாவில் கலந்து கொள்வதற்காக பிப்ரவரியிலிருந்தே நாட்டிய நாடகக் கலைஞர்கள் பிரம்பனானுக்கு வந்து சேர ஆரம்பிக்கிறார்கள். அநேகமாக எல்லாருமே அமெச்சூர் நாடகக் கலைஞர்கள் என்று ஜாதி குகமோ சொல்கிறார்.

நாடகக் காட்சிகளில் பல கட்டங்களில் பெரும் எண்ணிக்கையிலான பாத்திரங்கள் தோன்ற வேண்டியிருப்பதால் திறந்தவெளி நாடக மேடை மிகப்பெரிய அளவில் அமைக்கப்படுகிறது. கிட்டத்தட்ட கால் பந்தாட்டத் திடல் அளவுக்குப் பெரிய மேடை. ஜோக் ஜாகர்த்தாவைச் சேர்ந்த மிகப் பெரிய இசைக் குழு இந்த நிகழ்ச்சிக்காக அமைக்கப்படுகிறது.

இந்த நாட்டிய நாடகத்தில் ஒரு சிறப்பு, என்னவெனில், இரண்டு நாட்டிய பாணிகளின் சங்கமம்தான்! சூலோ நகரத்தில் ஒரு வித பாணியும், ஜோக் ஜாகர்த்தாவில் மற்றொரு பாணியும் உண்டு. ஆனால் பிரம்பனான் ராமாயண நாட்டிய நாடகத்தில் இரண்டு பாணிகளும் கலந்து புதிய பரிமாணத்துடன் நாட்டிய நாடகம் படைக்கப்படுகிறது.

நாடகம் நான்கு இரவுகளில் நான்கு பாகங்களாக நடத்தப் படுகிறது. முதல் நாள் இரவு நடத்தப்படும் நாடகப் பகுதிக்கு சிந்தா ஹிலாங் என்று பெயர். (சீதையை சிந்தா என்று இந்தோனேஷியர்கள் குறிப்பிடுகிறார்கள்.) சீதையை ராவணன் தூக்கிச் செல்லும் பகுதியே சிந்தா ஹிலாங். (ராவணனை ராஹ்வணா என்று இவர்கள் வழங்குகிறார்கள்.)

இரண்டாவது இரவு நடைபெறும் நாட்டியநாடகத்தின் பெயர் ஹனோமான் அபோங், அனுமான் இலங்

கைக்கு எரியூட்டும் நிகழ்ச்சிகளைக் காட்டும் நாடகப் பகுதி இது. மூன்றாவது பகுதியின் பெயர் ரோமோ தம்பா. இது கடலில் பாலம் அமைக்கும் நிகழ்ச்சியையும், ராவணனின் படைக்கும் ராமனின் படைக்கும் இடையே நிகழும் சண்டைகளையும் விவரிக்கும் நாட்டிய நாடகம்.

நான்காவது இரவு நிகழ்வது அபி சட்ஜி. இது ராம-ராவண யுத்தம். இதில் ராவணன் கொல்லப்படுவதும், சீதையை மீட்பதும் இடம் பெறும். சீதையின் கற்பைப் பற்றிய சந்தேகம், அக்னிப் பிரவேசம் ஆகியவையும் இந்தப் பகுதியில் அடங்கும். இதற்காக மேடையில் தீ வளர்க்கப்படுவதில்லை. அக்னி தேவன் தானாகவே சீதையிடம் வந்து தன்னுள் சீதையை மறைத்துக்கொண்டு பிறகு ராமனிடம் ஒப்படைப்பது போன்ற பாவனையுடன், நாட்டியக் காட்சி அமைக்கப்படுகிறது. பிறகு இருவரும் ஒன்று சேர்ந்து அரண்மனைக்குச் செல்வதுடன் நாடகம் முடிவடைகிறது.

இந்த ராமாயண நாட்டிய நாடகத்தில் ஸ்ரீ சூர்யாத்தி என்ற ஆசிரியை முக்கிய பொறுப்பேற்றிருக்கிறார். 18 வயதான இந்த ஆசிரியையின் குடும்பம், 1961—ம் ஆண்டிலிருந்து இதில் பங்கேற்று வருகிறது. இவர் சுத்தோவிக்க மாது. இவருடைய கணவரும், ஐந்து குழந்தைகளும் ராமாயண நாட்டியநாடகத்தில் ஈடுபாடு கொண்டிருக்கின்றனர்.

ஸ்ரீ சூர்யாத்தியின் மகள் ரீனு கடந்த நான்கு ஆண்டுகளாக சீதை வேடத்தில் நடித்து வருகிறார். 23 வயதான ரீனு, பல்கலைக்கழக மாணவி.

தேஜோ சுவிஸ்டியோ என்ற 26 வயது இளைஞர் ராமனாக நடித்து வருகிறார். ஒரு கட்டிடத் தொழிலாளியின் மகனான இவர் தேசிய நடனப் பள்ளியில் பயின்று வருகிறார்.

பிரம்பனன் ராமாயண நாட்டிய நாடகம் இப்போது பிரபலம் அடைந்திருக்கிறது. உள் நாட்டு மக்கள் மட்டுமின்றி வெளி நாட்டுப் பயணிகளும் மத்திய ஜாவாவுக்கு வந்து நாடகம் பார்த்து விட்டுச் செல்கிறார்கள்.

—ஜே. எம். சாலி

---

# நாட்டுப்புற நர்த்தகிகள்



கொஞ்சம் சலங்கை
கூறும் கதைகளை
மிஞ்சும்—
அன்ன நடையின்
மெட்டி இசை.

வீணையை வெல்லும்
நாதச் சுழலாய்
சிந்திப் பரவும்
நகைப்பொலி கீதம்.

மோர் கடையும்
லாகவச் சிலுப்பலோ
இன்பச் சுழலில்
மிதக்க வைக்கும்
ஜலதரங்கம்.

பட்டுச் சுவரில்
தட்டும் சாணி
பதிக்கும் தாளமோ
மிருதங்கம்.

கலை பறிக்கும்
கைவேக
அசைவுகளில்
எகிறித் தழுவும்
வளையல் ஓசையோ
தொளில் பிறக்கும் கீர்த்தனைகள்.

எட்டா
ஆழக் கேணியில்
எட்டி வெட்டி
இழுத்துச் சுழற்றும்
நீரெடுப்போ
கந்தர்வ லோகக்
களிநடனம்.

அவை—
கற்காமல் கலந்த
கைவந்த கலைகள்
இயற்கலை யரங்கின்
இலவசக் காட்சிகள்

தினமும்
நான் காணும்
தத்ரூப...
தேவி தரிசனங்கள்.

—'ஆச்சா'

# ஒரு மகா கவிஞன் மரித்துப்போனான்

தெலுங்கு தேசத்தின் ஒரு மகா கவி மரித்துப் போனான்.

பாரதியார் மறைந்தபோது பதினொரு வயது நிரம்பியவனாயிருந்த அந்தச் சிவப்புக் கவிஞன் பதினொரு நாட்களுக்கு முன்னால் தன் இமைகளையும் பேனாவையும் மூடிக்கொண்டான்.

தெலுங்கு தேசத்தின் இன்றைய இலக்கிய ரதங்கள் போய்க் கொண்டிருப்பதெல்லாம் அவன் போட்டுக் கொடுத்த பாதையிலே தான். ஸ்ரீஸ்ரீ என்று செல்லமாக அழைக்கப்பட்ட ஸ்ரீரங்கம் ஸ்ரீநிவாச ராவின் உடம்பு நெருப்பில் நீராடி நீறாகிவிட்டது.

மதக் கிடங்குகளுக்குள் மயக்கம் தெளியாமல் கிடந்த இலக்கியங்களை எழுப்பி, செருப்பில்லாத பாதங்களோடு, தகிக்கும் தார்ச் சாலைகளில் நடக்கவிட்ட பெருமை ஸ்ரீஸ்ரீயையே சேரும்.

ஒளி படைத்த கண்ணினரையும், உறுதி கொண்ட நெஞ்சினரையும் புது யுகம் படைக்க அழைத்துவிட்டு, நம் உள்ளூர் மகா கவி உயிர் துறந்த பிறகு அந்த ஒலியைத் தேய விடாமல் தெலுங்கில் ஒலிக்கச் செய்தவர் ஸ்ரீஸ்ரீ.

''உளுத்துப் போன
எலும்பார்களே!
உயிர்க் காம்பிலிருந்து
உதிரவிருக்கும்
முரட்டுச் சருகுகளே!
உதிர்ந்து போங்கள்.

குலையாத உறுதியில்
கொதிக்கும் குருதியில்
சரித்திரம் எழுதப்போகும்
சக்தியின் மைந்தர்களே!
வாருங்கள்.... வாருங்கள்!''

என்று தமது இருபத்து நான்காவது வயதிலேயே ''மகா பிரஸ்தானம்'' எழுதிய மாகவிஞன் அவன்!

பிரெஞ்சுப் புரட்சிக்கும் ருஷ்யப் புரட்சிக்கும் பின்னர் உலக இலக்கியம் நிறம் மாறத் தொடங்கியது.

இறந்த காலங்களும், இல்லாத காலங்களுமே இலக்கியத்தின் கருப் பொருளாயிருந்த காலம் கண் மூடியது.

இந்த மாற்றத்தை அமல் படுத்துவதற்கு அந்தந்த மொழியில் தலைமை தாங்கியவன் தளபதியாகி விட்டான்.

அவனது பேனா வாகை சூடிய வாளைப் போன்று வணக்கத்துக்குரியதாகிவிட்டது.

அந்த வகையில் ஸ்ரீஸ்ரீ நமது சகோதர மொழியின் தளபதி. ஒரு கிழட்டுப் பிச்சைக்காரியைப் பற்றி ஸ்ரீஸ்ரீ எழுதுகையில் மானுடம் குனிந்து கொண்டே கண்ணீர் வடிக்க வேண்டியிருக்கிறது.

''அதோ...
அந்தச் சாலையோரத்து
மரத்தடியில்
அணைந்துபோன அடுப்பாய்
ஒரு
கிழட்டுப் பிச்சைக்காரி,

அவளோடு
சண்டையிடும் ஈக்களை
விரட்டவும்
சக்தியில்லை.

அவளைவிட
ஒரு பிணமே
தேவலை!

பிச்சை கேட்கவும்
சக்தியில்லை.
இப்போதே நடுங்குகிறாள்.

இன்னும் வரவில்லை—
குளிர் காலம்!''

வார்த்தைப் படங்களாலான இந்த வார்ப்படம் பிச்சைக்காரியின் பிசுக்கை நம்மீது ஒட்ட வைக்கிறது.

அவர் கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினர் என்பதோ, விருது பெற்றவர் என்பதோ, திரைப்படங்களுக்கு வசனமும், பாடலும் வரைந்தவர் என்பதோ அவர் கீர்த்திக்குக் காரணமில்லை.

இவற்றுக்கெல்லாம் முன்னும் பின்னும் அவர் கவிஞர் என்பதுதான் அவரது கலையாத புகழின் காரணம்.

தன் சுய சோகங்களைப் பொது சோகங்களாய், பொது சோகங்களை சுயசோகங்களாய் பார்க்கக் கற்றிருந்த அந்தக் கவிஞர் இளைய தலைமுறைப் படைப்பாளிகளுக்கு முன்னோடியாய் இருந்து முடிந்து போனான்.

கவிஞனாய் மட்டும் இல்லாமல், மனித குலத்தின் விமர்சகராகவும் இருந்திருக்கிறார்.

இப்படித்தான்....இப்படித்தான்....

மனிதர்கள் தங்கள் காதுகளுக்குக் கவசம் தயாரித்துக் கொண்டாலும் மகா கவிகள் தங்கள் சங்குகளில் மூச்சுக் காற்றைச் செலுத்தியாவது முழங்கிக் கொண்டே இருக்கிறார்கள்.

மானுடனே, உன் காதுகளுக்குப் பூட்டியிருக்கும் கவசங்களைக் கழற்று!

**வைரமுத்து பக்கம்**





# பட்டாடைத் தகவல்கள்

சென்னையில் பிரபலமான பட்டுப் புடவை வியாபாரிகளான 'நல்லி' நிறுவனத்தின் உரிமையாளர் நல்லி குப்புசாமி தம்முடைய வாழ்க்கை வரலாற்றை 'வெற்றியின் வரலாறு' என்ற தலைப்பில் புத்தகமாக எழுதி உள்ளார். அதிலிருந்து சில தகவல்கள்...

- 'நல்லி' என்பது குடும்பப் பெயர். மார்க்கண்டேய மகரிஷி கோத்திரத்தில் நூற்றுக் கணக்கான உட்பிரிவுகள் உண்டு. இப்பிரிவுகளைச் சார்ந்த ஒவ்வொரு குடும்பத்திற்கும் தனித் தனிப் பெயர்கள் இடப்பட்டுள்ளன. அவ்வாறு இடப்பட்ட ஒரு குடும்பப் பெயர்தான் நல்லி.

- 1928-ல் நல்லியின் முதலாளி ஒரு நெசவுத் தொழிலாளியாகவாழ்க்கையைத் தொடங்கினர். 1983-ல் நல்லி கடையின் ஒரு நாள் விற்பனை ரூ. 5 லட்சத்துக்கும் அதிகம்.

- ஆரம்ப காலத்தில், அதாவது 1930-ஆம் ஆண்டு வாக்கில், ஒரு பட்டுப் புடவையின் விலை 12 முதல் 20 ரூபாய் மட்டுமே.

- சாதாரண ஆரணி பட்டுப் புடவைகளை 4 நாட்களில் நெய்துவிட முடியும். ஆனல் ஓர் உயர்ந்த காஞ்சிப் பட்டுப் புடவை நெய்ய 15 முதல் 20 நாட்கள் வரை பிடிக்கும். குடும்பமே புடவை தயாரிப்பில் முழு மூச்சுடன் ஈடுபட்டாலும் அதிகபட்சம் ஒரு மாதத்தில் இரண்டு புடவைகள்தான் நெய்யலாம். கூலியாக மாதம் ஒன்றுக்குக் கிட்டத்தட்ட 1000 ரூபாய் வரை கிடைக்கலாம். அதாவது ஒரு தொழிலாளியின் தினக் கூலி 30 ரூபாய். ஆனல் ஆண்டு முழுவதும் வேலை இருப்பதில்லை. எனவே பட்டுத் தறி நெசவாளியின் வாழ்க்கை பட்டாக இல்லை.

- புட்டா, கங்குடி போன்றவை நமது பாட்டிமார்கள் காலத்தவை என்றாலும், அவற்றை இப்போது புது வண்ணத்தில், மிக்ஸட் ஷேடில் தருகிறபோது இது தான் லேட்டஸ்ட் ஃபேஷன் என்று அள்ளிக் கொண்டு போய்விடுகிறார்கள்.

- முன்பெல்லாம் பட்டுச் சேலைகளில் முப்பாகம் என்று ஒரு ரகம் வரும். புடவை 8 அங்குலம் அகலம். 16 அங்குலம் ஒரு பக்கம் பார்டரும், 16 அங்குலம், உடலும் மறு பக்கம் 16 அங்குலம் பார்டருமாக இருக்கும். பிறகு கரை 8 அங்குலமாகக் குறைந்தது. பிறகு இரண்டு அங்குலம் ஜரிகை போட்ட புடவைகள் பிரபலமாக விளங்கின. மீண்டும் 1978-79ல், ஏழு, எட்டு அங்குல ஜரிகைக் கரை போட்ட புடவைகள் பிரபலமாயின. தற்போது மறுபடியும் இரண்டு முதல் ஐந்து அங்குலம் ஜரிகை போட்ட புடவைகளுக்கு வரவேற்பு அதிகமாக இருக்கிறது.

- காஞ்சிப் பட்டு கனமாகவும் அழுத்தமாகவும் இருக்கும். பனாரஸ் பட்டு அப்படி அல்ல. இதற்குக் காரணங்கள் உண்டு. பட்டுக்குச் சாயம் தோய்ப்பதில் கொதி நீர் தோய்ப்பு, குளிர்ந்த நீர் தோய்ப்பு என இரு முறைகள் உண்டு. கொதி நீரில் சாயம் தோய்க்கப்படும் காஞ்சிப் பட்டு கடைசிவரை மாறுவதில்லை, மங்குவதில்லை. ஆனால் பனாரஸ் பட்டுப் புடவை குளிர் நீரில் சாயம் தோய்க்கப்படுகிறது. காஞ்சி பட்டுப் புடவைகளின் ஜரிகைகள் அசல் தங்கம், வெள்ளியில் தயாரிக்கப்படுகின்றன. பனாரஸ் புடவைகளில் பெரும்பாலும் பித்தளை ஜரிகைகளே பயன்படுத்தப்படுகின்றன. பனாரஸ் புடவைகளில் டிசைனுக்கு முக்கியத்துவம் அளிக்கப்படுகிறது. காஞ்சிப் புடவைகளில் டிசைன்களோடு, கலருக்கும் சிறப்பிடம் அளிக்கப்படுகிறது.

- முன்பு புடவைகளில் மேலும் கீழும் கரைகள் இருந்தன. ஆனால் இப்போது விலை சிக்கனத்தைக் கருதிக் கீழே மட்டும் கரை கொண்ட புடவைகள் அதிக வரவேற்பைப் பெறுகின்றன. ஆனால் வட இந்தியாவில் புடவை கட்டும் முறை வேறுவிதமாக இருப்பதால், வடநாட்டுப் பெண்கள் ஒரு பக்கம் மட்டும் கரை கொண்ட புடவைகளை விரும்புவதில்லை.

- பட்டுத் துணிகளுக்கு ஏற்றப்படும் எல்லா சாயங்களுமே வெளுக்காது என்ற உத்தரவாதத்தை எந்த வியாபாரியாலும் தர முடியாது.

- தற்போது மிக அதிக விலை கொண்டது, டிஷ்யூ ரகப் பட்டுச் சேலைகளே. புட்டா ரகச் சேலைகளாக ஜரிகையோடு பட்டு நூல் கலந்து இவை நெய்யப்படுவதால், விலை அதிகமாகிறது. சில டிஷ்யூ ரகப் புடவைகள் எட்டாயிரம் வரை விற்கப்படுகின்றன.

- பிரான்சில் இருந்து வந்த பிரெஞ்சுக்காரர்களே ஜரிகைதயாரிக்கும் தொழிலைநவீனப்படுத்தி, பம்பாயை அடுத்த சூரத் நகரில் ஜரிகை தயாரிப்புத் தொழிலைத் தொடங்கினர். அன்று முதல் இன்றுவரை ஜரிகை தயாரிப்பில் சூரத் கொடி கட்டிப் பறக்கிறது.

- சேலத்தில் உள்ள ஒரு குடும்பத்தினர், கோயில் விக்கிரகங்களுக்கு அணிவிக்கப்படும் பட்டு உடை வகைகளை மட்டுமே தயாரிக்கிறார்கள்.

- திருப்பதி எழுமலையானுக்கு அங்க வஸ்திரம் தயாரித்து அளிக்கத் தனியாக 'டெண்டர்கள்' விடப்படுகின்றன

•

- பேரம் பேசுவது வாடிக்கையாளருக்கு பேல் பூரி சாப்பிடுவது மாதிரி. எனினும் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்பே 'பேரம்' கிடையாது. 'ஒரே விலை' என அறிவித்தோம். இதனால் வியாபாரம் குறையும் என்று நாங்கள் எதிர்பார்த்ததற்கு மாறாக, பலமடங்கு அதிகரித்தது.

- 1937-ல் நல்லியில் வேலைக்குச் சேர்ந்த பலர் இன்றும் பணிபுரிந்து கொண்டிருக்கிறார்கள்.

திரட்டியவர்: 'வெம்ஜி'
படம்: உத்ரா



**உள்ளதைச் சொன்னால்...!**

ஆற்றிலே மரத் துண்டு ஒன்று மிதந்து கொண்டிருந்தது. நான்கு தவளைகள் அதன் மீது அமர்ந்திருந்தன. முதல் தவளை சொன்னது: ''ஆகா! இக்கட்டை உண்மையிலேயே மிகவும் அற்புதமானது. உயிருள்ளது போல் அல்லவா நகர்கிறது!''

இரண்டாவது தவளை சொல்லியது: ''அல்ல நண்பா. இதுவும் மற்ற மரக் கட்டைகளைப் போன்றதுதான். நம்மையும் இக்கட்டையையும் கடலை நோக்கி ஆறுதான் இழுத்துச் செல்கிறது.''

மூன்றாவது தவளை முறுவலித்துச் சொன்னது: ''கட்டையும் நகரவில்லை, ஆறும் இழுத்துச் செல்லவில்லை. இயக்கம் என்பது நமது நினைப்பில்தான். சிந்தனை இன்றி ஏதும் இயங்காது.''

பூசல் வளர்ந்தது. நான்காவது தவளையிடம் தீர்ப்பு வழங்குமாறு மூன்றும் கேட்டன. அது, ''நீங்கள் ஒவ்வொருவர் சொல்லியதும் சரிதான். எவர் கருத்திலும் பிழை இல்லை!'' என்றது.

இதைக் கேட்ட மற்ற மூன்று தவளைகளும் சினங் கொண்டன. மூன்றும் ஒன்று சேர்ந்து நான்காவது தவளையைக் கட்டையிலிருந்து தண்ணீருக்குள் தள்ளி விட்டன!

—கலீல் கிப்ரான்

தமிழில்:
அரக்கோணம் சங்கரபாண்டியன்



முதலாளி: நேத்து வீட்டுக்குப் போற போது டைப்பிஸ்ட்டைக் கட்டி அணைச்சிட்டுப் போனீங்களாமே இது என்ன அக்கிரமம்!

புதிய மானேஜர்: நீங்கதானே காலையில் நான் வேலையில் சேர்ந்தப்ப எல்லாரையும் அணைச்சிட்டுப் போகணும்னு சொன்னீங்க?

—கே. ஆர். எம்.

அவள்: கத்தரிக்காயிலே இன்னைக்கு நிறையச் சொத்தை இருக்கே!

காய்க்காரி: நீங்க நல்லதாப் பொறுக்கி எடுத்துக்குங்க. பல் டாக்டர் வீட்டில சொத்தையை யெல்லாம் போட்டுட்டுப் போயிடுவேன்.

—கே. ஆர். எம்.





"நேற்று இரவு இந்த ஃபைவ் ஸ்டார் ஹோட்டலுக்குள் நாலு பேர் பாருங்க ...யாருக்கும் தெரியாமல் சுவர் ஏறிக் குதிச்சு...."

"எதையாச்சும் தூக்கிட்டுப் போயிட்டாங்களா?"

"ம்ஹூம்... நீச்சல் குளத்தில் ஆசை தீரக் குளிச்சுட்டுப் போயிருக்காங்க."

—என்.எஸ்.வி. குருமூர்த்தி

டைரக்டர்: ஷூட்டிங்குக்கு இவ்வளவு லேட்டா வர்றது உனக்கே நல்லா இருக்காம்மா?

நடிகை: என்ன சார் பண்றது? எங் கம்மா டிரஸ் பண்ணிட்டுக் கிளம்ப லேட் ஆயிடுச்சு!

—விஜி



# சொத்தை இல்லாத ஜோக்ஸ்!

# நீங்கள் கேட்டவை தராசு

○ இரா. கணபதி, கோவை-15 ★

? மணியனுக்குப் பதிலளித்த சோ, வண்ணநிலவன் கதைகளைப் பற்றிக் குறிப்பிடுகையில் பூசி மெழுகியிருப்பதைக் கவனித்தீரா?

! ''நான் முன்பு செய்த தவறுகளைச் சுட்டிக் காட்டி என்ன பயன்? இன்று நான் கூறுவன சரி என்று ஏற்றுக் கொள்ளுங்கள்'' என்று துணிவுடன் பேசுவார்கள் பெருந்தலைவர்கள். உதாரணங்கள்: ஹிந்தியை ஆதரித்த ராஜாஜி; சோஷலிஸத்தை ஆதரித்த மஸானி; நாத்திகம் பேசிய கண்ணதாசன். இப்படித் தங்கள் தவறுகளைத் தவறு என்று ஒப்புக்கொள்ளுகிற திராணி எல்லாருக்கும் வந்துவிடுவதில்லை. வண்ணநிலவனும், சோவும் சில சமயங்களில் இதனால்தான் தடுமாற நேரிடுகிறது.

○ சிந்தாமணி ஜகதீஷ், திருச்சி

? மேனகா காந்தியைக் கைது செய்தது குறித்து என்ன நினைக்கிறீர்கள்?

! அரசியல் அரங்கில் குதித்து அம்மையாரை எதிர்ப்பது என்று ஆரம்பித்து விட்ட பிறகு சிறைவாசத்துக்கு அஞ்ச முடியுமா? விரும்பி வரவேற்கத்தான் வேண்டும். மேனகாவுக்கு நன்மையே செய்யும் — அனுபவ ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும்.

○ ஆனந்தி மு. கலியாணசுந்தரம், மேட்டுப் பாளையம்

? அ.தி.மு.க.வைப் பற்றி வாய் திறந்தாலே எரிந்து விழும் ஜெயலலிதா, சோ பற்றி வாய் திறப்பதில்லையே?

! சோவும்தான் ஜெயலலிதா பற்றி ஒன்றும் கூறுவதில்லை!

○ ஜி. பாபு, திருச்சி

? தமிழக அமைச்சரவையை விரிவு படுத்தப் போவதாக எம். ஜி. ஆர். பல முறை அறிக்கை கொடுத்துவிட்டுப் பேசாமலிருப்பதேன்?

! பேச்சுடன் நில்லாது செயலிலும் இறங்கி விட்டார். தேதி குறிப்பிட்டு அறிக்கை விட்டதும் ஜெயலலிதா என்று பலர் எண்ண, எட்மண்ட் என்றும் உறுதியாகப் பேசப்பட இருதரப்பினருக்கும் ஏமாற்றமளித்து விட்டார்!

○ எஸ். முத்துகுமாரசாமி, தென்காசி

? குஜராத்தில் பெருமழையாமே?

! சௌராஷ்டிரா பகுதி வெள்ளத்தைப் பார்வையிட்ட பிரதமர் அதனை ஒரு தேசியப் பெரும் துரதிர்ஷ்டம் என வர்ணித்துத்துயர் தீர்க்க நன்கொடைகளைக் கோரியுள்ளார். நாளிதழைப்படித்துச் சொத்சொ என்று அனுதாபப்படுவதுடன் நில்லாமல் நம்மால் இயன்ற உதவியைப் பிரதமரின் தேசிய நிவாரண நிதிக்கு அனுப்பி வைப்போமே!

○ மு. நவீன், பங்களூர்

? ஐந்தாண்டு நிலையான ஆட்சி தருவோம் என்று சொல்லி வெற்றி பெற்ற தி. மு. க., இ. காங்கிரஸ் கூட்டணி மூன்றரை ஆண்டு காலத்தில் உறவை முறித்துக் கொண்டது சரிதானா?

கமிஷன் விசாரணை சூழலில் இன்று எம்.ஜி. ஆருக்கு இந்திராவின் தயவு தேவை. தென்னகத்தில் மாநிலங்களை ஒவ்வொன்றாக இழந்து வரும் இந்திராவுக்கு எம். ஜி.ஆர். தயவு தேவை. இந்நிலையில் பாண்டிச்சேரி கூட்டணி அரசிலிருந்து இ. காங்கிரஸ் விலகியது முறையல்ல எனினும் அதில் வியப்பில்லை. 'லஞ்ச ஊழலை உள்ளிருந்தபடியே திருத்தப் பார்த்தோம். முடியாது போகவே வெளியே வந்தோம்' என்ற காரணம் மூன்றரை ஆண்டுகளுக்குப் பின் இன்றைய சூழலில் வலுவிழந்து தொனிக்கிறது.

○ அ. காஜா, திருச்சி

? பதினெட்டு எம். எல். ஏக்களின் ஆதரவு இருப்பதாக தி.மு.க. கூறியும் பாண்டிச்சேரி அமைச்சரவை டிஸ்மிஸ் செய்யப்பட்டது நியாயம்தானா?

! மொத்தம் முப்பது உறுப்பினர்களைக் கொண்ட பாண்டிச்சேரி சட்ட சபையில் 12 உறுப்பினர்களைக் கொண்டிருந்த தி. மு. க. மேலும் ஆறு உறுப்பினர்களின் ஆதரவு தனக்கிருப்பதாகக் கூறியும் சட்ட சபையிலோ அல்லது லெப்டினன்ட்கவர்னர் முன்னிலையிலோ தன் பலத்தைக் காட்ட வாய்ப்புப் பெறவில்லை. மாநில ஆளுநர் நியாயத்தின் பக்கம் நின்று சுதந்திரமாகச் செயல்படாமல் மத்திய ஆட்சியின் கைப்பாவையாகி விட்டிருப்பதையே இது சுட்டிக் காட்டுகிறது.

○ மன்னை, பூமா வாசுதேவன், ஸ்ரீரங்கம்

? பாண்டி அமைச்சரவை கலைக்கப்பட்டதை ஜனநாயகச் செயலாகக் கருதுவீரா?

⌘ எட்மண்ட்



⌘ டி.ராமச்சந்திரன்





⌘ ஸ்ரீ. லட்சுமணன் ⌘ சோ

! கருதவே முடியாது. ஜனதா முன்பு எதிர்க் கட்சியாகச் செயலாற்றியபோது கூட்டணி அரசைக் குறை கூறியது என்பதும், பலப் பரீட்சைக்கு வாய்ப்பளித்தால் பணம் விளையாடும் என்றும் கூறப்படும் காரணங்கள் தர்க்க ரீதியாக நியாயமென்றே தோன்றலாம். ஆனால் இது போன்ற தருணங்களில் ஒரே விதமான ஜனநாயக மரபுகள் ஆளுநர்களால் கடைப்பிடிக்கப்படுவதில்லையே! ஹரியானாவில் இ. காங்கிரஸுக்கு அமைச்சரவை அமைய வேண்டுமானால் ஒரு நியாயம்; புதுவையில் தி. மு. க. அமைச்சரவை கவிழ வேண்டுமானால் ஒரு நியாயம் என்று சமயத்துக்கேற்றபடி மாறும் பச்சோந்தித்தனம் கண்டிக்கப்பட வேண்டியதே.

○ எஸ்.எஸ்.டி. ராஜன், திருவையூர்
? நாடாளு மன்ற உதவி சபாநாயகர் லட்சுமணன் ராஜிநாமா-கட்சி மானத்தைக் காக்கவா? கருணாநிதியின் வற்புறுத்தலுக்காகவா?
! மனச்சாட்சியின் உத்தரவுப்படி நடந்த இந்த ஒரு காரியம்தான் இந்தப் புதிய புதுவை நாடகத்திலே மனத்தைத் தொட்டுக் கரவொலி பெறுகிற ஒரே காட்சி.

○ இளங்கோ, ஏந்தல்
? தக்காளி சூப் பிடிக்குமா?
! பிடிக்கும் - கிலோ 80 பைசா விற்கும் போது.

○ எஸ். ராமநாதன், அருப்புக்கோட்டை
? அதிகளவு ஞானிகளை உடைய நாடுகளில் இந்தியா மூன்றாவது ஸ்தானம் வகித்தும் முன்னேறவில்லையே?
! அந்த விஞ்ஞானிகள் தங்கள் ஆற்றலை முழுவதுமாகப்பிரயோகிக்க ஏற்ற கொள்கைகளை அரசு கடைப்பிடிக்காததுதான் காரணம்.

ராஜன், ஊருர்வெளிக்கடை
? சமீப காலத்தில் மன வேதனையை அதிகரிக்கச் செய்த சம்பவம் எது?
! சமீபத்தில் குன்றத்தூர் போயிருந்தேன். அங்கே சேக்கிழார் கட்டிய கோவில் நன்றாக இருக்கிறது. ஆனால் சேக்கிழார் பெருமானுக்காகவே கட்டப்பட்ட கோவில் விளக்கேற்றக்கூட வழியில்லாத நிலையில் பரிதாபமாகக் காட்சி யளிக்கிறது. தொண்டை மண்டல ஆதீனம் இந்தப் பொறுப்பைத் தமது மடம் ஏற்றுக்கொள்ளும் என்றார். தொடர்ந்து கூறினார்: ''கோயில்களுக்கும்மடங்களுக்கும்கிடைக்க வேண்டிய வருமானங்கள் உரிய நேரத்தில் முழுமையாக வந்து சேருவதை உறுதிப்படுத்துவதற்காகவே ஏற்பட்டது இந்து அறநிலையப் பாதுகாப்பு இலாகா. ஆனால் கோயில்களுக்கு வரவேண்டிய பல கோடி ரூபாய்கள் பாக்கி நிற்பதாக அமைச்சரே சட்ட சபையில் பேசுகிறார். மேலும் வருவாய் மிகுந்த கோயில்கள் வருவாயற்ற சிறிய கோயில்களுக்கு உதவ வேண்டும் என்பது நோக்கம். ஆனால் அமைச்சரோ தமது இலாகா பல கோடிகளைச் சேமித்து ஃபிக்ஸட் டெபாஸிட்டில் வைத்திருப்பதாகச் சட்டமன்றத்தில் கூறிப் பெருமைப் படுகிறார்!''

⌘ எஸ். அன்புமணி, ஈரோடு-9.
? பத்திரிகைகளைக் காசு கொடுத்து வாங்கிப்படிப்பவரெல்லாம் வழிகாட்டிகளா? சிக்கனம் அது இது என்று ஏதோ சொல்வார்களே?
! உங்களுக்குச் சிக்கனம் எங்களுக்குப் பெரு நஷ்டம். சினிமா அவரவர் பார்த்தாக வேண்டும். வயிற்றுக்கு உணவு அவரவர் கணக்கில் நடந்தாக வேண்டும். துணிமணியும் மற்றவையும் அவ்வாறே. ஆனால் புத்தகங்கள், பத்திரிகைகள் மட்டும் கைக்காசு செலவின்றிக் கடன் வாங்கிப் படித்து விட்டுத் திருப்பித் தந்து விடலாம். அப்படியானால் எங்கள் கதி என்னவது? இதற்காகவே 'கடன் தரவோ, வாடகைக்குத் தரவோ மறுபடியும் விற்கவோ கூடாது' என்று ரீடர்ஸ் டைஜஸ்ட் போன்ற பத்திரிகைகளிலும் வேறு பல ஆங்கில நூல்களிலும் அச்சிடுகிறார்கள். ஆனால், யார் அதை மதிக்கின்றனர்?

★ ரூ. 10 பரிசு பெறுபவர்:

இரா. கணபதி,

7, செக்கு வீதி,

கோவை-15

---

## பூசி மெழுகுகிறாரே, சோ?

# நான் நிறங்களின் ரசிகன்

“எனக்கு நிறங்களைப் பார்த்தாலே சந்தோஷமாய் இருக்கிறது. ஏதேதோ உணர்வுகள் பொங்கிப் பொங்கி என்னுள் எழுகின்றன. அந்த வேகம், ஒரு ஓவியம் தீட்டினால் ஒழிய அடங்குவதில்லை” என்று சொல்கிற ஆர். ரங்கநாதனுக்கு வயது இருபத்தொன்பது ஆகிறது. மூன்று குழந்தைகள். குன்றத்தூர் அருகே சோமங்கலத்தில் வசிக்கிற இவர் ரிஸர்வ் வங்கியில் கடைநிலை ஊழியராகப் பணியாற்றுகிறார். “யாரிடம் ஓவியம் பயின்றீர்கள்?” என்று கேட்டதற்கு “யாரிடமும் முறையாகப் படித்ததில்லை. சில ஓவியர்கள் போடுகிற போது Strokes–ஐ கவனித்து நானே பயில ஆரம்பித்தேன். பார்க்கிற ஒவ்வொரு காட்சியும் எனக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கின்றன” என்று பதில் சொல்கிறார். “தரையில் மிதக்கும் சருகிலிருந்து மரத்தின் உச்சியில் கம்பீரமாய் மினுமினுக்கும் புத்தம் புது மலர்வரை நான் பார்க்கிற எல்லாப் பொருட்களின் நிறமும் என்னோடு ஏதோ சங்கேதமாய்ப்





பேசுகின்றன. அந்தச் சம்பாஷணைகளின் போது நான் நானாக இருப்பதில்லை. என்னை ஏதோ ஆட்கொள்கிறது” என்று சொல்கிற போதே அவர் மனத்தின் அதிர்வுகள் புரிகிறது. வீட்டுச் சுவரெல்லாம் இவரது ஓவியங்களே தொங்குகின்றன. பூச்சாடியில் பூக்கள் செருகி வைத்திருப்பது மாதிரி, மேஜையில் கண்ணாடி டம்ளர் நிறைய தூரிகைகள் காணப்படுகின்றன. “ஒரு குறிப்பிட்ட எல்லைக் கோட்டுக்குள் அடங்கித் தெரிவதைவிட, ஓவியங்கள் கண்ணுக்குத் தெரிகிற மாதிரி அப்படி அப்படியே வண்ணத் தீற்றல்களாய் இருப்பதையே விரும்புகிறேன். அந்த வண்ணத் தீற்றல்கள் ஒரு பாவத்தைக் கொண்டு வருவது மிக முக்கியம்...” ஒரு வித்தியாசமான ஓவியர் என்பது அவர் வரைந்த ஓவியங்களைப் பார்த்தாலே தெரிகிறது. “அலுவலகத்தில் வேலை பார்த்துக் கொண்டே கிடைக்கிற நேரத்தை ஓவியத்திற்காகச் செலவிடும் போது ஒரு ‘த்ரில்’ இருக்கிறது” என்கிறார்.

ரிஸர்வ் வங்கியில் பணிபுரிகிற சிலர் தமது எழுத்தார்வத்தை ‘இளங்கதிர்’ என்னும் கையெழுத்துப் பத்திரிகையை மாதா மாதம் வெளியிடுவதன் மூலம், வளர்த்துக் கொள்கின்றனர். அந்தப் பத்திரிகையில் நிறைய ஓவியங்களை வரைந்துள்ள இவர் தனக்குச் சூட்டிக் கொண்டிருக்கும் புனை பெயர் ‘ஜோக்கர்’.

அச்சுப் பத்திரிகையில் வெளிவரும் முதல் படம் எதிரே காணப்படுகிறது. “இயற்கை மழை தான் ஏச்சுப்புடுச்சு; ஏதோ செயற்கை மழைன்னு பேசிக்கிட்டாங்களே, வருமா?” என்று அந்த விவசாயி ஏங்குவது போலில்லை?

-சந்தனத்தேவன்

---

நயாகரா நீர்வீழ்ச்சியில் குதித்து உலக சாதனை ஏற்படுத்தப் போவதாக அறிவித்திருந்தாரே நினைவிருக்கிறதா? பம்பாயைச் சேர்ந்த அந்த தனஞ்செய் குல்கர்னி என்ற இருபத்தாறு வயது இளைஞர் ஒரு பள்ளிக்கூடக் கட்டிடத்தின் மேலிருந்து குதித்து தனது முதுகெலும்பை உடைத்துக் கொண்டிருக்கிறார்.

—ஏ. வி. தேவன்

---

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani Editor: K. Rajendran

